REGISTERED No. M. 1500.

# நவசக்தி

NAVASAKTI

(தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

| சந்தா விவரம். | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளி நாடு-வருட சந்தா ... | 6 | 0 |

| விளம்பர விகிதம். | | |
|---|---|---|
| கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. ... | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். ... | 0 | 8 |

நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

"வீடு பெறநில்" "மாற்ருனுக் கிடங்கொடேல்" "ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு ந. துந்துபிஸு பங்குனிமீ உசஉ (6—4—23) பரல் உச

## அகில இந்திய முஸ்லிம் மகாநாடு

### லட்சுமணபுரியில் கூட்டம்

அகில இந்திய முஸ்லீம் மகாநாட்டின் பதிவனந்தாவது வருடக்கூட்டம்மார்ச்சுமாசம் 31-ந் தேதியில் இராஜ்யசபை மாஜி அங்கத்தினரான ஸ்ரீமான் புர்கிரியின் தலைமையில் லட்சுமணபுரியில் கூடியது.

### உபசரணைப் பிரசங்கம்

உபசரணைக் கமிட்டித் தலைவரான ஸ்ரீமான் ஷெயிக்சாயித் உஸ்ஸேன் என்பார் பேசியதன் சாரம் :—

கிலாபத் விஷயம், ஆயுதம் தாங்கி யுத்தம் புரிந்ததனுலும் காஜி முஸ்தபாகெமால் பாட்சாவின் கட்டளைக் கிணங்க துருக்கியர்கள் நடந்து கொண்டதனுலும் தகுதியான ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது. கலிபாவிடம் இலௌகிக வைதிக அதிகாரங்கள் ஆகிய இரண்டும் இருக்கவேண்டும். அங்கோரா அரசாங்கத்தார் கலிபாவிடமிருந்து இலௌகிக அதிகாரத்தை எடுத்துவிடுவதாகச் சொல்லப்படுவது ஏற்றுக்கொள்ளக் கூடியதல்ல. முஸ்லீம் மதத்தைச் சேர்ந்த மௌல்விகள் உலமாக்கள்' இன்னுமிதர மதத்தலைவர்கள் ஆகியஇவர்களெல்லாம் கலிபாவிடம் இலௌகிக வைதிக அதிகாரம் இருந்தே தீரவேண்டுமென்று ஒரே மொத்தமாய் அபிப்பிராயப் படுகிறார்கள். கலிபா கொடுங்கோலராயிருக்கக்கூடாது. அங்கோரா அரசாங்கத்தார் உலக முஸ்லீம்களின் மத உணர்ச்சியைக் கவனித்துக் கலிபாவுக்கு இலௌகிக வைதிக அதிகாரங்களைச் சண்டைக்கு முன் இருந்ததைப் போல் கொடுக்க வேண்டும். இம்மாதிரி செய்வது பெருத்த காரியமல்ல. இவ்வதிகாரம்முஸ்லீம்களிடத்திலேயேஅடங்கிக் கிடக்கிறது. இந்து முஸ்லீம்ஒற்றுமைமகிழ்ச்சி கொள்ளக் கூடிய அளவுக்கு ஏற்பட்டிருக்கிறது. இங்ஙனம் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் சிலதன்னலமற்ற பிரசாரகர்களின்செயலேயாகும். இம்மாதிரியே இந்துமுஸ்லீம் ஐக்கியம் பலப்பட்டுக்கொண்டு போனுல் முடியாத காரியம் ஒன்றுமில்லை.

### அக்கிராசனப் பிரசங்கம்

ஸ்ரீமான் புர்கிரி தமது பிரசங்கத்தில் கிலாபத் கமிட்டியார் இஸ்லாமுக்குச் செய்துள்ள நன்மைகளைப்பாராட்டிவிட்டு பின்னர்க்கூறியது வருமாறு:—டிரிபோலி சண்டையிலிருந்து முஸ்லீம்களுக்கு மனவமைதி என்பது இல்லாமலே இருந்துகொண்டிருந்தது. ஆயினும் மாஜீ பிரதம மந்திரியான ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் காலத்தில் நிகழ்ந்தசெயல்கள் அவர்களுக்கு அதிகமான மனக்கஷ்டத்தையும் சொல்லொணுத இடுக்கண்களையும் ஏற்படுத்திவிட்டன. கிரேக்கர்கள் ஸ்மர்ணுவை ஆக்கிரமித்ததற்குத் தாமே காரணரென்று ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் ஒப்புக்கொண்டிருக்கிறார். இதனுல் தான் கிரேக்கர்கள் அனடோலியாவில் வெறுக்கத்தக்க படுகொலைகளை நிறைவேற்றினுர்கள். ஸ்ரீமான் லாயிட்ஜார்ஜ் துருக்கியர்கள் துருக்கிவிஷயம் அநுதாபத்துடன் கவனிக்கப் படவேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டதைச் சட்டைசெய்யவே இல்லை. அவர் மத்தியதரைக் கடலும் கிரேக்கர்களும் கிரேட்பிரிட்டனுக்கு இன்றியமையாதனவென்று எண்ணினுரே யல்லாமல் துருக்கியர்களும் அவர்களுடைய நட்பும் அவசியமில்லை யென்றேகருதினுர். திரேசிலும் ஸ்மர்ணுவிலும் கிரேக்கர்களின் தொகை அதிகமாய் இருக்கிறதென்று ஸ்ரீமான் வெனிசிலோ கூறியதற்கு ஸ்ரீமான் லாயிட்ஜார்ஜ் அவ்விடங்களி லுள்ளவர்கள் கிரேக்க மகம்மதியர்களாய் இருந்தாலும்,கிரீசையே தங்கள் தாய் நாடாகக் கருதிவிட்டார்களென்றும் ஆகவே அவர்கள் கிரேக்க ஆட்சியைச் சேர்ந்தவர்களென்றும் கூறி வெனிசிலோவின் கூற்றை ஆதரித்தார். இங்ஙனம் நடந்துகொண்ட ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜ் துருக்கியர்கள் ஸ்மர்ணுவையும் இஸ்மேத்தையும் நோக்கிச் சென்றபோது ஒரு விளம்பரத்தைப் பிரசுரப்படுத்தி துருக்கியர்களிடம் பிரிட்டிஷாருக்கும் இதர ஐரோப்பிய தேசத்தினருக்கும் அதிருப்தி உண்டாகும்படியாய்ச் செய்தார். இதனுல் ஸ்ரீமான் லாயிட்ஜார்ஜ் துருக்கிவிஷயமாகப் பெரிதும் விரோதபாவமே காட்டியிருந்தார் என்பது பெறப்படுகிறது.

### ஜலசந்தி விஷயம்

ஸ்ரீமான் லாயிட்ஜார்ஜ் அரசாங்கப் பதவியிலிருந்து விலகியவுடன் கிரேட்பிரிட்டன் துருக்கி விஷயமாய் நேசபாவத்துடன் நடந்து கொள்ளுமென்று எதிர் பார்க்கப் பட்டது. ஆனுல் லாசேன் மகாநாட்டு நடவடிக்கைகள் அக்கருத்துக்கு முரணுக இருக்கின்றன. துருக்கியர்கள் தங்களுடைய சுய முயற்சியினுல் கௌரவம் வாய்ந்த ஓர் இனத்தவராகத் தங்களை ஆக்கிக் கொண்டார்கள். இந்நிலையை அவர்கள் இழக்கப்போவதில்லை, இங்கிலாந்து துருக்கி விஷயமாய்ச் சிநேகபாவம் பாராட்டினுல் அஃது இங்கிலாந்துக்கு நன்மையுண்டாக்குவதாகும். துருக்கியர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள நகல் உடன்படிக்கை வகுத்தம் தரத்தக்கதாம். இவ்வுடன்படிக்கை சேவர்ஸ் உடன்படிக்கையைக் காட்டிலும் அதிகமான மாற்றம் ஒன்றையும் தன்னுள் கொண்டிருக்கவில்லை, ஆகவே துருக்கியர்கள் அதை அங்ஙனமே ஏற்றுக் கொள்வார்களென்று நம்புவதற்குஇடமில்லை. துருக்கியின் எல்லைப்புறங்கள் விஷயமாகத் தக்க ஒரு முடிவு ஏற்பட்டிருக்கிறதே யல்லாமல் ஒப்படைப்பு விஷயமாகவும் ஜலசந்திகள் விஷயமாகவும் சிறுபான்மையோர் விஷயமாகவும் பொருளாதார நிபந்தனைகள் விஷயமாகவும் தகுதியான ஒரு முடிவு இன்னும் ஏற்படாமல் இருக்கிறது. இஃது ஏற்படுமளவும் சமீபகீழ்ப்பிரதேச விஷயம் முடிவடையாது என்பது திண்ணம். ஒப்படைப்பு விஷயமாகச் செய்யப்பட்டிருக்கும் நிபந்தனைகள் துருக்கியின் அரசியல் பொருளாதார நிலையைச் செவ்வைப்படுத்தா, ஜலசந்திகளைச் சர்வதேசத்தினருக்கும் உரிமையாக்குவதைப் பற்றி ஒருவரும் தடை சொல்லமாட்டார்கள். ஜலசந்திகளின் பாதுகாப்புக்காக இருந்த கோட்டை கொத்தளங்களை நேச தேசத்தினர் தகர்த்து எறிந்து விட்டதும் யுத்தக்கப்பல்கள் நிபந்தனை ஒன்று மின்றி மத்தியதரைக் கடல் வழியாகவும் கருங்கடல் வழியாகவும் செல்ல அநுமதிக்கப் பட்டிருப்பதும் பால்கன் நாடுகளுக்குப் பாதகத்தை யுண்டாக்குவதாகும். இங்ஙனம் கூடாதென்று ருஷ்யா வற்புறுத்துகிறது. தேசத்திற்கு ஆபத்துவந்த காலையிலும் துருக்கியர்கள் யுத்தக்கப்பல்கள் அல்லாத கப்பல்கள் ஜலசந்திவழியாய்ச்செல்ல அநுமதித்து இருக்கிறுர்களாகையால் இப்போதும் அங்ஙனமே செய்வார்கள்என்பதில்தடையில்லை. ஆகவே ஜலசந்தி வழியாய் யுத்தக் கப்பல்கள் போவதற்கு அதிகமான நிபந்தனைகள் ஏற்படுத்தப்பட வேண்டும்,

### சிறுபான்மையோர் விஷயம்

துருக்கியின் ஆளுகையின்கீழ் இருக்கும் சிறுபான்மை யோருக்கு அவர்களின் ஜனத்தொகைக்குத் தக்கபடி வகுப்புவாரிப் பிரதிநிதித்வம் கொடுத்து விடுவது நன்மை பயப்பதாகும். இங்ஙனமல்லாமல் வேறுவிதமாய்க் காரியங்கள் செய்யப்பட்டால் அதனுல் மிகுதியான பயன் ஒன்றும் ஏற்படமாட்டாது. துருக்கியர்களுக்கும் இத்தாலியருக்கும் யுத்தம் நடைபெற்றபோது எகிப்து, சண்டையில் சேராமல் இருப்பதற்காக லார்ட்டு கிச்னர் எகிப்துக்கு அனுப்பப்பட்டார். அக்காலத்திலிருந்து இங்கிலாந்து இஸ்லாமிய நாடுகளுக்குவிரோதமாக நடந்து கொண்டுவந்திருக்கிறது. இஸ்லாமியதேசங்கள் இப்போதுபலமற்றவையாய் இருக்கின்றன. ஆனுல் கிரேட்பிரிட்டனின் அந்தஸ்து இப்போது குறைந்து விட்டிருக்கிறது, தங்களுக்கு எவ்விடத்தில் அதிக பக்கபலம் இருக்கிறதென்று கருதினுர்களோ அவ்விடத்தில் தான் பிரிட்டிஷாருக்கு அதிகமானகஷ்டம் ஏற்பட்டிருக்கிறது.

### ஆசியா ஆசியாக் காரர்களுக்கே உரித்தானது

ஆசியா ஆசியாக்காரர்களுக்கே உரித்தானது என்றகொள்கை இதுகாலை பிரபலப்பட்டு வருகிறது.' அராபியர்கள் துருக்கியினின்று விலகி இன்னோர் இராஜாங்கத்துக்கு அடங்கி இருப்பதற்காகச் சண்டையின்போது துருக்கிக்கு விரோதமாகச் சண்டைசெய்யவில்லை. முழுசுதந்திரம் அடைந்துவிட வேண்டியதற்காகவே சச்சரவுசெய்தார்கள். இவர்களுக்குச் சுதந்திரம் நல்கப்படுமென்று பிரிட்டிஷாரால் வாக்களிக்கப்பட்டது. இப்போதோ வேனில் இதற்குமாருக விஷயங்கள் கூறப்படுகின்றன மத்திய கீழ்ப் பிரதேசங்கள் அராபியா ஆகிய இந்நாடுகள் விஷயமாய்த் துருக்கியர்கள் அராபியர்கள் இந்தியர்கள் ஆகிய இவர்கள் ஒரேவித கொள்கையே கொண்டவர்களா யிருக்கிறுர்கள். அக்கொள்கை யாது? இவைகளுக்குச் சுயநிர்ணயம்கொடுத்து முஸ்லீம் அல்லாதாரின் ஆதிக்கத்தினின்று இவற்றை வேறுபிரித்து விடுவதுமாகும். இதற்கு இங்கிலாந்து சுலபமாய் இணங்குமென்று நம்ப இடமில்லை. ஆகவே முஸ்லீம்கள், மேற்கூறப்பட்ட இராஜ்யங்கள் முஸ்லீம் அல்லாதாரின் ஆதிக்கத்தினின்று நீங்கிவிடப் பாடுபடவேண்டும். இதுகாலை ஆசியா இயக்கம்என்ற ஓர்இயக்கம் ஏற்பட்டிருக்கிறது. அவ்வியக்கத்தின் கருத்து ஆசியா ஆசியாக் காரர் களுக்கே உரித்தானது என்பதாம். இதற்கிணங்க காபூல், டேஹரான் அங்கோரா ஆகிய இத்தேசங்கள் நேசபாவமானஉடன்படிக்கைகளை நிறைவேற்றிக்கொண்டுள்ளன. இம்மாதிரியாகவேமற்றத்தேசங்களும் செய்தால் அதனுல் அதிக நன்மை ஏற்படும். சிலர் இவ்வியக்கம் பலப்படுவதென்பது வெறும் பேச்சென்று எண்ணுகிறுர்கள். என்னைப் பொறுத்த மட்டில் நாளாவட்டத்தில் இவ்வியக்கம் பலப்பட்டு இந்தியாவும் சரியான நிலையில் இருக்குமென்று நம்புகிறேன். கலிபாவுக்கு இலௌகிக வைதிக அதிகாரங்கள் இருக்க வேண்டும். இலௌகிக அதிகாரத்தையும் வைதிக அதிகாரத்தையும் வேறுபிரிக்கக்கூடாது. அங்ஙனம் நடைபெற்றுல் முஸ்லீம்கள் அதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கமாட்டார்கள். முஸ்லீம்களின் உணர்ச்சியை மதித்து அங்கோரா அரசாங்கத்தார் கலிபாவுக்கு இருக்க வேண்டிய அதிகார விஷயமாய் நடந்து கொள்வார்களென்று நம்புகிறேன்.

### இந்தியாவைப் பற்றிய விஷயங்கள்

இந்தியாவில் அதிருப்தி ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் இந்தியாவிலும் இங்கிலாந்திலுமுள்ள குறுகிய நோக்கமுள்ள இராஜ தந்திரிகளின் செயலேயாகும். சீர்திருத்தங்களுக்குப் பின்னர் எழுந்த ஒத்துழையா இயக்கத்தில்சம்பந்தப்பட்டவர்களை அரசாங்கத்தார் சாதாரணக் கைதிகளுக்கும் கேவலமாக மதித்துநடத்தியது, நடத்திவருகிறது வெறுக்கத்தக்கதாகும். ஐக்கிய மாகாண அரசாங்கத்தார் அரசியல் கைதிகள் விஷயமாய் நடந்துகொண்ட மாதிரி பாராட்டத்தக்கதே. ராயல் கமிஷன் ஏற்படுத்தப்பட்டது வேண்டப்பட்டதல்ல, சிவில்இலாகாக்களிலும் இராணுவஇலாகாக்களிலும் இந்தியர்களைப் பெரும்பான்மையராய் நியமிக்க வேண்டும், கென்யாவில் கஷ்டப்படும் நம் சகோதரர்களுக்காகப் பாடுபட வேண்டும். கென்யாவில் நம் சகோதரர்கள் துன்புறுவதற்குக்காரணம் வெள்ளையர்கள் நிறவித்தியாசத்தை அளவுக்கு மீறி பாராட்டுவதாகும். இந்தியர்கள் மற்ற நாடுகளிலும் நம் நாட்டிலும் செவ்வையாய் நடத்தப்படுவதற்கு மூன்று விதமாய் இந்தியா அரசாங்கத்தார் காரியங்களைச் செய்ய வேண்டும். முதலாவது சீர்திருத்திய அரசாங்க அமைப்பு எங்ஙனம் நடைபெற்று வருகிறதென்பதை ஆராய ஒரு கமிஷன் நியமிக்கப்படவேண்டும். இக்கமிஷன் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் இந்தியா அரசாங்கத்துக்கும் எத்தகைய சம்பந்தம் இருக்கவேண்டுமென்பதைப் பற்றியும் இந்தியா அரசாங்கம் ஜனங்களுக்குஎவ்வளவு தூரம் அ[illegible]க்க வேண்டுமென்பதைப் பற்றியும் [illegible]ருப்பாட்சி கொடுப்பதைப் பற்றியும் கவனிக்க வேண்டும். இரண்டாவதாக இராணுவத்தையும் சிவில்இலாகாக்களையும் இந்தியமயமாக்குவதைப் பற்றியும் இந்தியாவுக்கும் பிணைப்பொறுப்பு கொடுப்பதைப் பற்றியும் இராணுவச் செலவைச் சுருக்குவதைப்பற்றியும் வெளிநாடுகளிலுள்ள இந்தியர்களின் உரிமைகளைப் பாதுகாப்பதைப் பற்றியும் கவனிக்கவேண்டும். மூன்றுவதாக, சிறைச்சாலைகளில் இருக்கும் அரசியல் கைதிகளை விடுதலை செய்வதைப்பற்றியும் கவனிக்க வேண்டும்.

சட்டசபைக்குள் புகுந்து ஐக்கியமாய்க் காரியங்களைச் செய்தால் இந்தியா அரசாங்க அதிகாரவர்க்கத்தினரும் இங்கிலாந்திலுள்ள பிற்போக்கானவர்களும் செய்துவரும் பாதகங்களைத் தடை செய்யலாம். வகுப்பு வாரிப் பிரதிநிதித்வம் அவ்வளவு முக்கியமானதல்ல, இந்து முஸ்லீம் ஒற்றுமையும் ஒரு மதத்தினர் இன்னொரு மதத்தாருடைய எண்ணங்களையும் கொள்கைகளையும் மதித்து நடக்க வேண்டியதும் இன்றியமையாதனவாம்.

### தீர்மானங்கள்

மார்ச் 31-ந் தேதியில் விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் டாக்டர் அன்சாரி இந்தியாவிலுள்ள பல வகுப்புகளுக் கிடையிலும் ஐக்கியத்தை யுண்டாக்குவதற்காக தேசீய ஒப்பந்தம் ஒன்று நிறைவேற்றப்பட வேண்டுமென்று கொண்டு வந்த தீர்மானம் அங்கத்தினர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ஸ்ரீமான் ஜின்னு சட்டசபைப் பிரவேசம் வேண்டுமென்று ஒரு தீர்மானங் கொண்டு வந்தார். இத்தீர்மானத்தை டாக்டர் அன்சாரியும் மற்றவர்களும் எதிர்த்தார்கள், ஞாயிற்றுக்கிழமை இத்தீர்மானம் விஷயமாக ஐந்து மணி நேரம் வாதம் நடைபெற்றது பின்னர் ஓட் எடுக்கப்பட்டபோது தீர்மானம் விஷயாலோசனைக் கமிட்டியில் தோற்றுப் போய்விட்டது,

பின்னர் மாலை ஐந்து மணிக்கு சபையின் கூட்டம் ஆரம்பமாயிற்று. அப்போது மேற்கூறப்பட்ட இரண்டு தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன. இராசா அலி கொண்டுவந்த ஒரு தீர்மானம் வாதிக்கப்படுகையில் போதுமான அங்கத்தினர் இல்லையென்றும் ஆகவே இவ்விஷயத்தை ஆலோசிக்கக்கூடாதென்றும் ஓர் அங்கத்தினர் கூற இதைச் சபைத் தலைவர் ஏற்றுக்கொண்டு கூட்டத்தை ஒத்திப் போட்டு விட்டார்.

# "வித்தை விரும்பு"

(ஸ்ரீமான் - அ. ஸ்ரீநிவாஸாசாரியாரவர்கள் பி. ஏ., எல். டி., எழுதியது)

IV

இத்தகைய உன்னதமான நிலையினை அடைய விரும்பிக் கல்வி கற்கும் மாணவர்க்கு வேண்டிய குணங்கள் - கொள்கைகள் சிலவற்றைச் சிறிது சிந்திப்பாம். (1) முதலில் பரவித்தை அபரவித்தை என்ற வேற்றுமையை ஒழித்து விட்டு, கல்விகற்றலும் தெய்வத்தை வழிபடுதலும் ஒன்று எனக்கருதி, பரவித்தை பயிலும்போது வைக்கும் பக்தியையும் சிரத்தையையும் அபரவித்தையினிடத்தும் நாட்டவேண்டும். முன்காலத்தில் அபரவித்தையையும் பரவித்தையையும் ஓர் ஆசிரியரே போதித்து வந்தார். (2) இரண்டாவது, வித்தையின்மேலுள்ள அவாவை நாளடைவில் பெருக்கி அவாஅன்கு முதிரும்படிச் செய்தல்வேண்டும். அங்ஙனம் முதிரும்போது, ஏகாக்ரசித்தம் அல்லது மனம் ஒரு நிலைநிற்றல் என்னும் குணம் தானாய் ஏற்பட்டு வரும். ஒரு வித்தையின் கண்ணுள்ள பேரவாவின் பயனாய் மனம் எப்போதும் ஓய்வின்றி அதனிடத்தேசென்று கொண்டிருந்து, மெய்வருத்தமும் பசியும் கண்துஞ்சலும் கருதாது, கொண்ட எண்ணத்திலேயே மனம் அழுந்தி விடுமானால், அத்தகைய மனம் தனக்குத்தானே குருவாம்; அதனால் அறியக்கூடாத விஷயம் ஒன்றும் உலகில் இல்லை. "எண்ணிய எண்ணியாங்கு எய்துப; எண்ணியார் திண்ணியர் ஆகப்பெறின்." எண்ணம் திண்மையுறுவது பேரவாவாற் கிளர்ந்த ஏகாக்ர நிலையால்-பற்றிய விஷயத்தினிடத்துப் பைத்தியங் கொள்ளுதலே மஹாபுருஷர் இலக்கணம் என்பது ஆன்றோர் கூற்று. (3) மூன்றாவது, கல்வியின் முழு நோக்கத்தைப்பற்றிய உணர்ச்சியும் அதை நிறைவேற்ற முயற்சியும் வேண்டும். வித்தை பயிலுவது என்றால் ஒரு மனிதன் தனக்குள் மறைந்து கிடக்கும் ஈசுவரத் தன்மையைத் தன்னிடத்துப் புறம்பே தோன்றுமாறு வெளிப்படுத்துதல் என்று ஸ்வாமி விவேகானந்தர் வற்புறுத்திக் கூறியிருக்கின்றார். இவ்வுரை, ஆசிரியர்கள் மாணவர்கள் ஆகிய இருவர் இதயங்களிலும் பதித்து வைக்கத்தக்கதொன்று. (4) நான்காவது ஆசானிடத்தும் சீடனிடத்தும் பிரம்மச்சரியம் என்னும் குணம் வாய்க்கவேண்டும். இதன் அருமையையும் அவசியத்தையும் உணர்ந்தவர் இக்காலத்தில் மிகச்சிலரே. ஆயினும் அதன் பெருமைக்கும் அவசியத்திற்கும் என்றைக்கும் குறைவு நேரிடாது. இவ்விரதத்தை அனுஷ்டிப்பதால் உடலும் மனமும் மிக்க வலியுறுகின்றன. பன்னிரண்டு வருடம் இவ்விரதத்தை இடைவிடாது அனுட்டித்தால் அளவிறந்த சக்திகளும் அபாரஞானமும் அறிவும் உண்டாம் என்பதே சாஸ்திரங்களின் துணிபு. சான்றோர் தம் அநுபவத்தேகண்ட மெய்யும் அதுவே. ஸ்வாமி விவேகானந்தரிடம் தோன்றிய அற்புதமான ஞாபக சக்திக்கும் கேட்போர் மனதினைப் பண்படுத்தும் பெற்றித்தாய அவர்தம் பிரசங்க ஆற்றலுக்கும் காரணமாயிருந்தது, அவர் பால்யமுதல் தவறாது அநுட்டித்த பிரம்மசரியமே என்று அவரே உரைத்திருக்கிறார். பிப்பலாத மஹரிஷியினிடம் கேட்டு உண்மைகளை அறிய விரும்பிச் சென்ற சிஷ்யர்களைநோக்கி, அப்பெரியார் "தவத்தோடும் பிரம்மசரியத்தோடும் சிரத்தையோடும் கூடி இன்னும் ஒரு வருடம் வாழ்ந்து பின் என்னிடம் வந்து கேளுங்கள்" என்று கூறியதன் கருத்தும் உன்னத்தகுந்தது. பிரம்மசரியத்தால் 'ஓஜஸ்' என்னும் சக்தி அதிகரிக்கும் என்று யோகநூல்கள் கூறுகின்றன. இந்தச் சக்தியால்தான் மஹான்கள் கூறும்வார்த்தை ஸாதாரணமாயினும் கேட்போர்காதில் நுழைவதோடு நின்று விடாமல், அறிவினுட்சென்று அதனையும் நோக்கி அதிற்பதிந்து, அதோடு நின்றுவிடாது இன்னும் அவர் தம் ஆன்மாவைத் தட்டியெழுப்பும் தன்மையுடையதாகின்றது. வங்காளநாட்டில் வைணவ மதத்தை நிலைநாட்டிய ஸ்ரீ கௌராங்கர் என்னும் திருநாமம் பூண்ட ஸ்ரீ கிருஷ்ணசைதன்ய சுவாமிகளின் பிரிய சிஷ்யர்கள் தங்கள் கீர்த்தன மூலமாய்ப் பக்தியையும் கேட்போர் செவிவழியாக நெஞ்சினுட் புகுத்தி விடுவார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. இத்தகைய நலங்களெல்லாம் தழைப்பதும் பிரம்மசரியத்தாலே. (5) ஐந்தாவது:—குற்றத்தை ஆராயாது குணத்தையே தேடிய லையும் தன்மையும் வேண்டும். "பிறர்பழிகாணப் பெரிது அகமகிழ்ந்து" எதையும் தூஷித்து ஒருவரையும் மதியாது வேம்பை விரும்பும் காக்கையைப்போலக் குணத்தை மறந்து குற்றத்தையே கூறித்திரியும் தன்மையால் உண்மையறிவின் வளர்ச்சி தடைப்படுகிறது. மெய்யன்பும் பக்தியும் பணிவும் மெய்யறிவுக்கு ஏற்ற உணவாம். டாக்டர் ஸ்டீனர் என்னும் ஜெர்மானிய மஹான் பின்வருமாறு கூறுகிறார்:— "மனிதர் வாழ்க்கை தற்காலத்துள்ள ஆடம்பரமின்றி, ஸர்வ ஸாதாரணமாய், சுலபமாய், இருந்த முற்காலத்து, ஞானநெறியில் நிற்றல் எளிதாயிருந்தது. மதிக்கவேண்டிய விஷயங்களும் பரிசுத்தமாய் வைத்திருக்கவேண்டிய விஷயங்களும் மற்ற சாதாரண உலகப்பொருள்களைக் காட்டிலும்வேறாய்-மேன்மையாய் விளங்கிக் கொண்டிருந்தன. குற்றம் காண்பதையே கொள்கையாக் கொண்ட இக்காலத்தோர் உயர்ந்த லக்ஷியங்களெல்லாம்தாழ்ச்சியையெய்துகின்றன. பயபக்தி, மரியாதை, பிரார்த்தனை, ஆச்சரியம் என்னும் உணர்ச்சிகளுக்குப் பதிலாய் மற்றவை நெஞ்சிற் புகுந்து விடுகின்றன. தற்காலத்து அந்நான்கு உணர்ச்சிகளும் வரவர மறைந்து வருகின்றன. இவை படிப்பினால் ஏற்படக் கூடியனவல்ல; வாழ்க்கையால் மாத்திரம் உண்டாக்கூடும். சிஷ்யனாயிருக்க விரும்புவோன் விடாமுயற்சியோடு பக்தியையும் சிரத்தையையும் பேணி வளர்த்து வரவேண்டும். காணும் இடந்தோறும் புகழவும் வணங்கவும் செய்யும் விஷயங்களையே தேடித் திரியவேண்டும். சந்தர்ப்பங்களும் கடமைகளும் இடந்தரும் போதெல்லாம், குறைகூறுவதையும் மனிதரை நிதானிப்பதையும் முற்றிலும் நீக்கிவிடவேண்டும். ஒரு மனிதனைக் கண்டவுடன், அவன் அசத்திக்காக அவனைக் குறை கூறுவேனாயின் உயர்ந்த ஞானத்தைப்பெறும் திறமையை நான் இழந்து விடுவேன். ஆனால் அன்போடு அவன் குணங்களை ஆராயின், அத்திறமையை நான் சேகரிக்கிறேன்." உண்மையுரைக்கின், அஷனை யென்னும் விஷக்காற்று உலவும்போது, வித்தையென்னும் பூண்டு வெகுநாள் ஜீவியாது.



## மனோரஞ்சிதம்

### அரசியல் விவகாரங்களும் பிரபுக்களும்

சென்ற ஐந்து வருடகாலத்தில் லண்டனிலுள்ள பிரபுக்கள் சபைக்கு ஒரு முறையேனும் வாராமற்போன இலௌகிக பிரபுக்கள், பத்து தடவைக்கு குறைவாக வந்த இலௌகிக பிரபுக்கள் ஆகிய இவர்களின் தொகை அரசாங்கத்தினரால் வெளியிடப்பட்ட ஒரு ஜாப்தாவில் காணப்படுகிறது. அது வருமாறு:—

| வருடம் | ஒரு முறையேனும்வாராதவர்கள் | பத்து தடவைக்குள்ளாகவே வந்தவர்கள் |
|---|---|---|
| 1918 | 283 | 183 |
| 1919 | 178 | 241 |
| 1920 | 195 | 180 |
| 1921 | 240 | 220 |
| 1922 | 189 | 222 |

பிரபுக்கள் சபையில் ஏறக்குறைய 700 இலௌகிக பிரபுக்கள் இருக்கிறார்கள்.

### சமுத்திரம் மேடிடுகிறது

சென்ற மார்ச்சுமீ 14-ந் தேதியில் ஜப்பானிலிருந்து கொழும்பு துறைமுகம் வந்துசேர்ந்த ஷீகாமாரு என்ற கப்பலில் வந்த பிரயாணிகள் பின்வரும் ஆச்சர்யப் படத்தக்க கதையை கூறினார்கள். "சிங்கப்பூரைவிட்டுப் புறப்பட்ட இரண்டு தினங்களானபின் கடலிலிருந்துபுகைவருவதாகக் கண்ணுக்குப் புலப்பட்டது. இதைக்கண்டு கப்பல் தலைவர் ஏதோ ஒருகப்பலுக்குத் தீவிபத்து நேரிட்டதென்று கருதி,அப்புகை வரும்வழியாய்க் கப்பலைச் செலுத்தினர். ஆனால் அவ்விடத்திற்குச்சென்று பார்வையிட்டபொழுது அங்கு ஒரு கப்பலும் காணப்படவில்லை. அதிகமான புகையும் சாம்பலும் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாக ஜலமட்டத்திற்குமேல் வந்துகொண்டிருந்தது. இவை கடல்மட்டத்திற்கு 600 அடிக்கு மேல் கிளம்பின." சமுத்திரத்திற்குள் இருக்கும் எரிமலை ஒன்று தன் வேலையைச் செய்து கொண்டிருக்கிறதென்றே எண்ணவேண்டியிருக்கிறது. பின்னர் வந்தசெய்திகளின்படி அவ்விடத்தில் புதியதொரு தீவுதோன்றியிருக்கிறது. இதைக் கவனிக்கும்படியாய் மாலுமிகளுக்கு எச்சரிக்கை செய்யப்பட்டிருக்கிறது. புதிதாய்த் தோன்றியிருக்கும் தீவு எரிமலையின் சிகரமாய் இருக்கலாம். நாளடைவில் இஃது உயர்ந்து போகலாம். இம்மாதிரியாகவே மெக்ஸிகோவைச் சேர்ந்த கலிபோர்னியா கடற்கரையில் ஒரு சம்பவம் நடைபெற்றிருக்கிறது.

(நியூஇந்தியா)

### படித்தவர்கள் தொகை

1911-ம் வருட ஜனக்கணக்கின்படி ஆண் மக்களில் (இவர்கள் பத்து வயதுக்கு மேலானவர்கள்) ஆயிரத்துக்கு 140 பேர்வீதம் படித்தவர்களாய் இருந்தார்கள். பெண்கள் ஆயிரத்துக்கு 13 பேர் படித்தவர்களாய் இருந்தார்கள். 1921-ம் வருஷத்துக்கணக்கின்படி ஆயிரத்துக்கு ஆண்களில் 161 பேர் படித்தவர்களாகவும் பெண்களில் 23 பேர் படித்தவர்களாகவும் இருக்கிறார்கள்.

### குஷ்டரோகிகள் தொகை

இந்தியாவில் 1921-வருட ஜனக்கணக்கின்படி ஆயிரம் பேருக்கு 35 பேர் குஷ்டரோகத்தால் பீடிக்கப் பட்டவர்களாய் இருக்கிறார்கள்.

### ஜனக்கணக்கும் பணச்செலவும்

1911-வருட ஜனக்கணக்கின் போது ஆயிரம் பேருக்கு ரூபா 5 முதல் 6 வரை செலவாயிற்று. ஆனால் 1921-வருட ஜனக்கணக்குக்கோ ரூபா 10முதல் 12வரை ஓர் ஆயிரம்பேருக்குச் செலவாயிருக்கலாமென்று கருதப்படுகிறது.

### இந்தியாவின் இறக்குமதியும் ஏற்றுமதியும்

1921-22-ம் வருடத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தைச் சேர்ந்த நாடுகளினின்று இந்தியாவுக்கு இறக்குமதியான சாமான்களின் கிரயம் 1,77,36,00,000 ரூபாயாகும். இதில் கிரேட் பிரிட்டனிலிருந்து மாத்திரம் 1,50,92,00,000 ரூபா பெறுமான சாமான்கள் இறக்குமதியாகியிருக்கின்றன. இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தைச் சேர்ந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்த சாமான்களின் மொத்தக் கிரயம் ரூபா 1,00,90,00,000 ஆகும்.

### தூதன்காமனும் முன்பிறப்பு விஷயமும்

பண்டைய எகிப்திய அரசனான தூதன்காமன் என்பானின் சவக்குழியைத் தோண்டி லார்டு கார்னர்வன் என்பார்ஆராய்ச்சி செய்ததன்பயனாய் அவ்வரசனின் விலையுயர்ந்த ஆபரணங்கள் பண்டையாடை உடைபாவனைகள் முதலானவை வெளிவந்திருக்கின்றன என்பதை நேயர்கள் அறிவார்கள்.. ஸ்ரீமதி எடித்ராக்பெல்லர் மெக்கார்மிக் என்ற மாது தான் முன் ஒரு ஜென்மத்தில் இவ்வரசனின் மனைவியாய்இருந்ததாகக் கூறுகிறாள். ஸ்ரீமான் பிரஸ்டன் கிப்சன் என்பார் தாம் முன்பிறப்பில் தூதன்காமனாய் இருந்தது தனக்குச் செவ்வையாய் ஞாபகமிருக்கிறதென்று கூறுகிறார்.

### கீழ்நாட்டினர் பழக்க வழக்கத்தால் வியாதி சொற்பம்

சமீபத்தில் லண்டனில் செய்த உபந்யாச மொன்றில் ஸ்ரீமான் அர்பத்னட் லேன் என்பார் வெள்ளையர்கள், சிலவெள்ளையரல்லாத நிறத்தவர்களைப்போல் வாழ்க்கையை நடத்தி அவர்களைப் போலவே உண்டும் மலம் ஜலம் முதலானவைகளைக் கழித்துக் கொண்டும் போனால் அநேக வியாதிகளினின்று தப்பித்துக் கொள்ளலாம் என்று கூறினர்.







## மதிப்புரை

### சரீர மர்ம சாஸ்திரம்

[ஆசிரியர்: ஸ்ரீமான் எம். எஸ். நடேச முதலியார்; புத்தகம் கிடைக்குமிடம்: மாணிக்க விலாசம் பிரஸ், 12. அருணாசல முதலி தெரு, சென்னை; விலை ஒரு ரூபாய்; தபாற்கூலி வேறு.]

உடற்கூற்றுச் சாஸ்திரத்தைப்பற்றி ஆங்கிலத்தில் ஏராளமான நூல்கள் இருக்கின்றன. தமிழ் மொழியில் இரண்டொரு நூல்களே இதுகாறும் வெளிவந்திருக்கின்றன. 'சரீர மர்ம சாஸ்திரம்' என்னும் இந்நூல் இக்குறையை ஒருவாறு நிவர்த்திக்கின்றது. இதில் உடலின் அமைப்பு, இரத்த ஓட்டம், தசைகளின் வேற்றுமை, எலும்புகளின் உருவம் முதலியவைகளைப் பற்றிச் சுருக்கமாகவும் அழகாகவும் எழுதப்பட்டிருக்கின்றன. அழகிய சித்திரப் படங்களும் இதில் விளங்குகின்றன. இந்நூலை ஒவ்வொருவரும் படித்தறிதல் அவசியம். ஒருவன் சௌக்கியமாக வாழவேண்டுமென்று விரும்பினால் உடற்கூற்று நூலைப்பற்றிய அறிவு அவசியம் இருக்கவேண்டும். தேகக் கூறுபாடுகளை அறிந்து கொள்ளாதவன் சௌக்கியமாக இருக்க முடியாது. ஆதலின் ஒவ்வொருவரும் இந்நூலைப் பொன்னே போல் போற்றுதல் வேண்டும்.

### ஸ்ரீ நடராஜ தத்துவம்

[ஆசிரியர்: ஸ்ரீமான் என். சுப்பிரமணிய ஐயர்; புத்தகம் கிடைக்குமிடம்: நோபில் அச்சுக்கூடம், சென்னை; விலை எட்டு அணா; தபாற்கூலி வேறு.]

ஆசிரியரின் ஆராய்ச்சிவன்மையும் பக்தியின் பெருமையும் இந்நூலால் நன்கு விளங்குகின்றன. நடராஜ மூர்த்தியின் இலக்கணங்களும் அவைகளின் தத்துவங்களும் இதில் ஒழுங்குபெறக் கூறப்பட்டிருக்கின்றன. பக்திமான்கள் இந்நூலைப் பெரிதும் போற்றவேண்டும்.

### திலக வதியார்

[ஆசிரியர்: ஸ்ரீமான் மு. நடேச முதலியார்; தமிழ்ப் பண்டிதர், எஸ். பி. ஜி. ஹைஸ்கூல், திரிசிராப்பள்ளி; விலை காணப்படவில்லை.]

தமிழ் நாட்டில் தோன்றிய கற்பரசிகளில் ஒருவருடைய சரித்திரத்தைத் தெளிவுபடக் கூறுவது இந்நூல். அப்பருடைய சகோதரியாகிய இவ்வம்மையார், தாம் மனத்தால் வரித்தகணவர் இறந்துபோகப் பிறிதொருவரை மணக்க மாட்டேனென்று உறுதி பூண்டு திருவதிகை வீரட்டானத்தில் இருந்த வரலாறும், நாவுக்கரசரின் சூலைநோயை நீக்கிய வரலாறும் இதில் அழகுபட எழுதப்பட்டிருக்கின்றன. தமிழ் நாட்டுச் சகோதரிகள் திலகவதியாரைப் போன்ற உறுதியும் பக்தியும் கொண்டவர்களாக இருக்க வேண்டுமென்பது எமது விருப்பம். தமிழ் நாட்டுத் தாய்மார்கள் இந்நூலை அவசியம் படிப்பார்களாக.

### சச்சிதானந்த சிவம்

[ஆசிரியர்: ஸ்ரீமான் சுப்பிரமணிய சிவம்; வெளியிட்டோர்: ஸ்ரீ சாதாரதன சற்குரு புஸ்தக சாலையார், பார்க்டவுன், சென்னை; விலை ஒன்றே அரைக்கால் ரூபாய்; தபாற்கூலி வேறு.]

அரிய தேசபக்தராகிய ஸ்ரீமான் சிவம் அவர்கள் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னர் சிறைச்சாலையில் வதிந்த காலத்தில் இந்நூல் எழுதப்பட்டது. இதன் மூன்றாவது பதிப்பு இதுகாலை நமது பார்வைக்கு வந்திருக்கிறது. இதனாலேயே இதன் பெருமை நன்கு விளங்கும். ஸ்ரீமான் சிவம் இந்நூலில் வேதாந்தத்தின் சாரத்தைப் பிழிந்திருக்கிறார். வேதாந்தத்தை அநுபவ வாயிலாக அறிய விரும்புவோர்க்கு இந்நூல் பெரிய கருவியாயிருக்கும். ஸ்ரீமான் சிவத்தின் வேதாந்த ஞானம் இந்நூலினின்று நன்கு புலனாகும்.

### ஸ்ரீராம கிருஷ்ண தமிழ் தினக்குறிப்பு

ருத்ரோத்காரி வருஷத்திய தமிழ் தினக்குறிப்பு (டைரி) ஒன்று வரப்பெற்றோம்.இதில் ஒரு தினசரிக்குரிய எல்லா விஷயங்களும் அடங்கியிருக்கின்றன. வியாபாரிகளுக்கு முக்கியமான வட்டி விபரங்கள் தபால் இலாகாவின் விவரங்கள் முதலியன பல இதில் அடங்கியிருக்கின்றன. வியாபாரிகள் ஒவ்வொருவரும் இக்குறிப்பை ஆதரிக்க வேண்டுமென்று விரும்புகிறோம். டைரி ஒன்றுக்கு விலை அணா பத்து; தபாற் செலவு தனி; வேண்டுவோர், ஸ்ரீ ராமகிருஷ்ண பிரசுரசாலை தேவகோட்டை, என்ற விலாசத்திற்கெழுதுக.

### பஞ்சாங்கம்

ருத்ரோத்காரி வருஷத்திய ஆனந்த போதினி சுத்த திருக்கணித பஞ்சாங்கத்தின் பிரதி ஒன்று வரப்பெற்றோம். இது பலர்க்கும் பயன்படக் கூடியது. தனிப்பிரதியின் விலை மூன்று அணா. வேண்டுவோர் ஆனந்த போதினி ஆபீஸ், 15, வெங்கடேச மேஸ்திரி தெரு, சென்னை என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

## செய்தித் திரட்டு

திலகர் சுயராஜ்யநிதிக்கு நேற்று வரை தமிழ் நாட்டிற்கு 15403-9-10 கிடைத்திருக்கிறது.

பர்மா அரசாங்க வரவு செலவு திட்டத்தில் மொத்தம் 2638310 ரூபா குறைக்கப் பட்டிருக்கிறது.

ஆங்கிலக் கவிஞரான ஸ்ரீமான் வொர்ட்ஸ் வொர்த்தும் கைத்தறியைப் புகழ்ந்து கூறியிருக்கிறார்.

ஸ்ரீமான் கெ. எஸ். மார்க்கம் ஐயர் மார்ச் 31-ந் தேதியில் கடலூர் சிறையினின்று விடுதலை யடைந்தார்.

அமிர்த சரஸிலுள்ள ஒரு பருத்திக்கிடங்கில் தீவிபத் தொன்றுண்டானதன் பயனாய் அதிகநஷ்டம் ஏற்பட்டது.

எரவாடா சிறையிலிருக்கும் மௌலானா ஹஸரத் மோஹினி கடுமையாய் நடத்தப்படுகிறாராம் என்று "சுயராஜ்யா" கூறுகிறது.

தேச நிலைமையைச் சரிப்படுத்திக் கொள்வதற்காக லார்ட்ரோன்ஸன் பிரான்சுக்குச்சென்றுள்ளார். பதினைந்து நாள் வரை பிரான்ஸில் தங்கியிருப்பர்.

தொழிற்கல்வியை போதிப்பதற்காக ஸ்ரீமான் வரதராஜுலு நாயுடு 'தமிழ்நாட்டில் தொழிற் கல்விச்சாலை ஒன்றை ஏற்படுத்தப் போகிறாராம்.

பம்பாய் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட சிக்கனக் கமிட்டியார் செலவில் 88 லட்சம் குறைத்துவிடவேண்டுமென்று தீர்மானித்துள்ளனர்.

லண்டனில் கூடிய சுதந்தர தொழிற்கட்சி மகாநாட்டார் முழுமையிலும் மதுபானத்தைத் தடுப்பது கூடாது என்று தீர்மானித்திருக்கின்றனர்.

தூதன் காமன் சமாதியைத் தோண்டி விலையுயர்ந்த ஆபரணங்கள் இருப்பதைக் கண்டுபிடித்த லார்டு கார்னர்வன் கெய்ரோவில் இறந்து விட்டார்.

சென்னைச் சட்டசபை அக்கிராசனரான ஸ்ரீமான் இராஜகோபாலாச்சாரியார் தேக சௌக்கியத்தை முன்னிட்டு சென்ற திங்கட்கிழமை பம்பாய்க்குப் புறப்பட்டு அங்கிருந்து ஐரோப்பாவுக்குப் பிரயாணமாகிறார்.

இரங்கூனுக்கருகிலுள்ள ஆலோன் எனுமிடத்து ஐந்து கிடங்குகளில் அரிசி மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட் டிருந்தன. இக்கிடங்குகளில் தீவிபத் துண்டாகவே ஏற்பட்ட நஷ்டம் 4 லட்சத்து 40 ஆயிரம் ரூபாயாகும்.

கூர்ஜ்ஜரத்தைச் சேர்ந்த பிரபல ஒத்துழையாதாரான ஸ்ரீமான் ஹீந்துலால் யக்னிக் என்பார் மீது கி. பு. கோ. 112-வது பிரிவுபடி தொடுக்கப் பட்டிருக்கும் ஜாமீன் வழக்கு இன்று ஆமதாபாத்தில் நடைபெறும்.

அலகாபாத் நகர பரிபாலன சபைக்குப் பண்டித ஜவஹர்லால் நேரு பெரும்பாலான அங்கத்தினர்களால் தலைவராய்த் தெரிந்தெடுக்கப்பட் டுள்ளார். ஸ்ரீமான் சாகுர் ஆமத் உபதலைவராய்த் தெரிந்தெடுக்கப்பட் டிருக்கிறார்.

லண்டன்டைம்ஸ் 'டெயிலிமெயில்' முதலான பத்திரிகைகளின் சொந்தக்காரராய் இருந்து சில மாதங்களுக்கு முன் இறந்துபோன நார்த்கிளிப் பிரபுவின் மனைவியார் சர் ராபர்ட் ஹட்சன் என்பாரை இரண்டாங்கணவராக வரித்துக் கொண்டார்.

லட்சுமணபுரியில் புதிதாகக்கட்ட உத்தேசிக்கப் பட்டிருக்கும் சட்டசபைக்கட்டடம் விஷயமாய் அங்கத்தினர்கள் பணத்தை வீண்விரயஞ் செய்யக்கூடாதென்று அன்னுருக்குப் பண்டிதமதன் மோகன் மாளவ்யா விண்ணப்பஞ் செய்துள்ளார்.

சட்டசபை பகிஷ்காரஞ் சம்பந்தமாகக் காரியங்களைச் செய்த குற்றத்திற்காக நியாக்கியான் எனுமிடத்தைச் சேர்ந்த பௌத்த தர்ம ரக்ஷக சபையின் தலைவரும் உபதலைவரும் இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனைக்கு உட்படுத்தப்பட்டார்.

சிறைச்சாலை சேர்ந்திருந்தவர்களை அமுலுக்குக் கொண்டுவந்ததன் பயனாய்ச் சென்னை அரசாங்கத்தார் வேலூர் சிறையிலிருக்கும் ஸ்ரீமான் கிருஷ்ணசாமி சர்மாவை விசேஷ வகுப்புக் கைதியாக நடத்தும்படியாய்ச் சூபரின்டெண்டனுக்கு உத்திரவு இட்டுள்ளார்.

18 வயதுக்குக் குறைந்த பெண்களைத் தேவதாசிகளாய்க் கோயில்களில் நியமிக்க கூடாதென்று செய்யப்பட்ட சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வராமல் அரசாங்கத்தார்நிறுத்தி இருப்பதைக்கண்டிப்பதாக இந்தியமாதர்கள் சங்கத்தார்தீர்மானித்திருக்கின்றனர்.

பர்மாவைச் சேர்ந்த ஸ்ரீமான் தாமஸ் தாம்சன் என்ற போலீஸ் டிபுடி இன்ஸ்பெக்டர் ஒருவர் தம் குமாரத்தியைக் காரணமின்றி அடைத்து வைத்ததற்காகவும் பகோயம் உண்டாக்கியதற்காகவும் விசாரிக்கப்பட்டு மூன்று மாதக்கடுங்காவல் தண்டனைக்கு உட்படுத்தப்பட்டார்.

கென்யா இந்தியர்களின் குறைகளைப் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் முன்னிலையில் எடுத்துரைத்து வேண்டிய செய்ய ஏற்பட்டிருக்கும் பிரதிநிதிக் கூட்டத்து அங்கத்தினர்களான ஸ்ரீமான் சாஸ்திரியார், ஜம்னாதாஸ் துவாரகதாஸ் ஆகிய இவர்கள் இம்மாதம் 14-ந் தேதி பம்பாயை விட்டுப் புறப்படுகின்றனர்.

பீரரை, ஸ்ரீஜாமுக்குத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்பதைப்பற்றி இங்கிலாந்தில்'கைசரம் சார்பாக வாதாட சர்ஆலி இமாம் நியமிக்கப் பட்டிருக்கிறாரென்றும் இவருக்குத் தினமொன்றுக்கு ஓர் ஆயிரம் ரூபா கட்டணம் என்றும் ஸ்ரீமான் இமாம் மே மாதத்தில் இங்கிலாந்துக்குப் பிரயாணமாவார் என்றும் தெரிகின்றன.

காரசியில் பிரசுரமாகும் அல்வாஹீத் என்ற பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீமான் ஈபீசக்ஷ் என்பார் இராஜத்துவேஷம் உண்டாக்கும்படியான ஒரு கட்டுரையை வேறோர் பத்திரிகையினின்று எடுத்து வெளியிட்டாரென்று குற்றஞ்சாட்டப்பட்டு இரண்டு வருடக்கடுங்காவல் தண்டனைக்கு காரசி மாஜிஸ்ட்ரேட்டால் உட்படுத்தப்பட்டார்.

சென்ற திங்கட்கிழமை இரவு சைனா பஜார் வழியாக ஸ்ரீமான் இரத்தினமுதலி என்றஒருவர்நடந்துகொண்டிருக்கையில்பச்சையப்பன் கலாசாலைக்கருகில் ஒரு டிராம் வண்டியின் ஆள் தூக்கித் தட்டு முன்னிலையில் வீழ்ந்து விட்டார். டிராம் வண்டி ஓட்டி என்ன முயன்றும் வண்டியை நிறுத்தக் கூடாமற் போகவே வண்டி அவர்மீது முட்டி அவரை நசுக்கிக் கொன்று விட்டது.

குன்னூருக்குச் சமீபத்திலுள்ள காடுகளில் புலி ஒன்று கடந்த சில தினங்களாய் ஜனங்களுக்கு அதிக தொந்திரவை உண்டாக்கி வந்தது. அதை ஸ்ரீமான்களான அரங்கசாமி, ராஜு என்றஇரண்டு வேட்டைக்காரர்கள் வேட்டை நாய் உதவியைக் கொண்டு கொன்றுவிட்டார்கள். இப்புலி 9 அடி நீளமும் 5 அடி உயரமும் கொண்டதாய் இருந்தது. இதன் கனம் 350 பவுன்களாகும்.

கான்பூரைச்சேர்ந்த ஒத்துழையாதாரான ஸ்ரீமான் தாசுக் உஸ்ஸேன் இராஜத்துவேஷமும் ஜாதித்துவேஷமும் உண்டாக்கும்படியான உபந்யாசங்கள் புரிந்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு இரண்டுவருட வெறுங் காவல்தண்டனைக்கும் ஐம்பது ரூபா அபராதத்திற்கும் உட்படுத்தப்பட்டார். அபராதத் தொகையைக் கட்டத்தவறினால் அதற்காக ஐந்துமாத தண்டனையை ஏற்றுக்கொள்ள வேண்டு மென்றும் தீர்மானிக்கப்பட்டன.

ஸ்ரீமான் எம். என். ராயல் வெளியிடப்பட்ட "ஸ்ரீமான் தாஸூக்கும் அவருடைய சகாக்களுக்கும் ஒரு பகிரங்கக் கடிதம்"என்ற துண்டுப்பிரசுரமும் இந்தியாவிலுள்ள "தொழிற் சங்கங்களுக்கு ஒரு வேண்டுகோள்" என்றதுண்டுப்பிரசுரமும் ஸ்ரீமான் கிருஷ்ணசாமி சர்மாவால் எழுதப்பட்ட "ஜோஸப்மாஸினி" என்புத்தகமும் கி. பு. கோ 99-வது பிரிவுபடி பறிமுதல் செய்யப்பட்டனவென்று சென்னை அரசாங்கத்தார் உத்திரவு பிறப்பித்திருக்கின்றனர்.

பம்பாய்க் கவர்னர் சர் பிரோஜிஷா மேத்தாவின் உருவச்சிலையைப் பம்பாய் நகரபரிபாலன சபையின் எதிரில் திறந்துவைத்தார். அப்போது கவர்னர், சர்பிரோஜிஷா மேட்டாவைப் புகழ்ந்து விட்டு கஷ்டப்படாமல் கலபத்தில் சேர்த்திவாங்கி விடவேண்டுமென்றென்னும் ஜனப்பிரதிநிதிகளுக்கு ஒரு வழியில் கல்லறிவு கொடுத்தவதாய் இவ்வுருவச்சிலை இருக்குமென்றும் இன்னொருவழியில் அன்னாரைப்போல் தேசத்திற்காகவும் ஏகாதிபத்யத்திற்காக உழைக்க ஊக்கமளிப்பதாயிருக்குமென்றுங் கூறினர்.

பிரான்ஸிலுள்ள பாரிஸ் செர்பூர்க் சாலை வழியாய் ஜப்பான் சக்ரவர்த்தியின் மைத்துனரான இளவரசர் கிடாசிரவாகா, இளவர் அசாகா, இளவரசி கிடாசிரவாகா, இன்னொருமாதுஆகியஇவர்கள் ஒருமோட்டார்வண்டியில் சென்று கொண்டிருந்தார்கள். வழியில் மோட்டார் வண்டி ஒரு செடியில் மோதுண்டது. இதனால் இளவரசர் கிடாசிரவாகாவும் மோட்டார் ஓட்டியும் கொல்லப்பட்டார்கள். மற்றவர்களுக்குப் பகோயம். பின்னர் வந்த செய்தியொன்றால் மற்றவர்களுக்கு நிடீரென உயிருக்குப் பாதகமில்லை யென்று தெரிகின்றன.

இராஜக்கோட்டை சமஸ்தானத்தில் ஜனநாயக ஆட்சி முறையை ஏற்படுத்தும் நோக்கத்துடன் தொண்ணூறு ஜனப் பிரதிநிதிகள் கூடிய ஒரு பிரதிநிதி சபை ஏற்படுத்தப்பட்டது. இச்சபைக்குத் தலைவர் ஒரு ஜனப்பிரதிநிதியே யாவர். சமஸ்தானத்தின் எல்லாப் பிரஜைகளுக்கும் ஓட் உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஜனப் பிரதிநிதிகள் சபைக்கு இரண்டு மாதர்களும் அங்கத்தினராய்த் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளார்கள். ஸ்ரீமான் லீலாதார மேதா என்பார் சபையின் தலைவராய் ஜனப் பிரதிநிதிகளால் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளார்.

திருநெல்வேலியிலுள்ள பல விடங்களில் கொள்ளையடித்து வரும் ஐம்புலிங்க நாடான் சென்ற மார்ச் மாதம் 30-ந் தேதியில் களக்காடு எனுமிடத்திற்கு அருகிலுள்ள பதாய் எனுமிடத்திய கள்ளுக் கடைக்குப் போந்து அக்கள்ளுக்கடையைச் சேர்ந்த ஷண்முகம் என்பானுடன் சம்பாஷித்துப் போனான். இதை அறிந்த போலீஸ்காரர்கள் மேற்கூறப்பட்ட ஷண்முகம் என்பானைக் கைது செய்து அதிகாரியின் முன்னிலையில் நிறுத்தினர்கள். குற்றவாளி என்று கருதப்பட்ட ஒருவனுக்கு இடங் கொடுத்த குற்றத்திற்காக ஷண்முகம் என்பானுக்கு அதிகாரி இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

காகினடா தாசில்தார் பின்வரும் ஓர் உத்திரவைக் கிராம உத்தியோகஸ்தர்களுக்குப் பிறப்பித்துள்ளார் என்று தெரிகிறது. "உம்முடைய கிராமத்தில் வேலை செய்யும் கூலிகளும் மற்றவர்களும் கூலி போதவில்லை என்ற காரணத்தை முன்னிட்டும் வேறு காரணங்களை முன்னிட்டும் வேலை நிறுத்தம் செய்தால், சம்பவம் நடைபெற்ற 12-மணி நேரத்திற்குள் அதைப் பற்றி விசேஷ ஆள் மூலமாய் வேலை நிறுத்தம் ஏற்பட்டதன் காரணம் யாருடைய தூண்டுதலின்மேல் நடைபெற்றது எத்தனை பேர் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள் என்பதைப் பற்றித் தெரிவிக்க வேண்டும். வேலை நிறுத்தம் முடிவடையாமல் இருக்கும் வரை அதன் நிலையைப் பற்றி அவ்வப்போது தெரிவித்துக்கொண்டேயிருக்க வேண்டும்.

(சுயராஜ்யா)

### தலைவர்களுக்கு உபசாரப் பத்திரம்

#### ஆமதாபாத் நகரபரிபாலன சபை மீது வழக்கு

ஆமதாபாத் நகரபரிபாலன சபையார் சில மாதங்களுக்கு முன் ஒத்துழையா இயக்கம் சம்பந்தமாய்த் தண்டனையடைந்து தலைவரான ஸ்ரீமான் கோபால்தாஸ் தேசாய்க்கும் ஸ்ரீமதி காந்திக்கும் உபசாரப் பத்திரம் ஒன்று வாசித்துக் கொடுத்தார்கள். இதற்காக நேரிட்ட செலவு ருபா 64-5-6 ஆகும். ஆனால் இப்போது இத்தொகை தவறாய்ச் செலவழிக்கப்பட்டு விட்டது என்று கருதி அரசாங்கத்தாரால் அத்தொகையைப் பெறுவதற்காக நகரபரிபாலன சபையார் மீது ஆமதாபாத் ஜில்லா நீதிபதி கோர்ட்டில் வழக்குத் தொடுக்கப்பட்டிருக்கிறது.

### தமிழ்நாட்டுக் காங்கிரஸில் நடந்தேறியவேலை

#### காரியதரிசி தெரிவிப்பது

மார்ச் 31-ந்உ முடிவ சபைகாங்கிரஸ் தீர்மானத்திற்கிணங்க தமிழ்நாட்டுக் காங்கிரஸார் நடத்தியவேலை வருமாறு.—காங்கிரஸ் அங்கத்தினர்கள் 14081; திலகர்நிதி ரூபா 14724—14—0; தொண்டர்கள் 535; பிப்ரவரி மாதத்தில் மேற்படி கமிட்டிக்கு வந்த மொத்த வரும்படி ரூபா 43000-11-3. அதில் அம்மாதத்தில் செலவான தொகை 14027-3-6 கையிருப்பு ரூபா 28973-7-9.

## அறிவிப்பு

அடுத்த வெள்ளிக்கிழமை (13-4-23) சத்தியாக்கிரக வார இறுதிநாளும் தமிழ் ஆண்டுப் பிறப்புநாளும் ஒன்று கூடுதலால் அன்று நமது அச்சுக்கூடத்துக்கு ஓய்வு கொடுக்க நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. 'நவசக்தி'யின் அடுத்த பரல் (20-4-23) வெள்ளிக்கிழமை ஒலிக்கும்.

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1923௵ ஏப்ரல்௴ 6௳

## சத்தியாக்கிரகம்

உலகத்தில் தோன்றிய ஒவ்வொரு மதமும் சத்தியத்தையே அடிப்படையாகக்கொண்டு இலங்குகிறது. எம்மதமும் சம்மதமெனக் கொண்ட சமரச ஞானிகளும் சத்தியத்தையே வற்புறுத்துகிறார்கள். சத்தியத்தின் உருவாகவே ஆண்டவன் அன்பர்களின் உள்ளத்தில் கோயில் கொண்டிருக்கிறான். மெய்யின்றி இப்பொய்யுலகம் நடைபெறுவதில்லை என்பது அறிஞர் கண்ட உண்மை. சத்தியமாதல், அறமாதல், பிறநற் செயல்களாதல் தேய்வுற்றுத் தீச்செயல்கள் ஓங்கி நிற்கும் காலத்தில் ஆண்டவன் அடியவர் வாயிலாக உலகத்தைச் சீர்ப்படுத்துகிறான். அத்தகைய அடியாரில் ஒருவர் மகாத்மா காந்தி என்பது எமது அபிப்பிராயம். அவருடைய திருவடிகளுக்கு எமது வணக்கம்.

எர்வாடா சிறையில் நிர்மல உள்ளத்துடனும் இனிய முகத்துடனும் தவங்கிடக்கும் காந்தியடிகள் மீது இன்று ஒவ்வொருவருடைய மனமும் செல்லும். இன்று அவருடைய உருவத்தைத் தேசபக்தர்கள் வணங்குவார்கள். அவருடைய திருநாமத்தைப் புகழ்ந்து பாடுவோர் பலர். அவர் அவ்வப்பொழுது உபதேசித்தருளிய பொன்னுரைகளைச் சிந்தித்து அறிவு விளக்கம் பெறுவோர் பலர். இவர் அனைவருடைய திருவடிகளுக்கும் எமது வணக்கம்.

நான்காண்டுகளுக்கு முன்னர் எமது காந்தி யம்பெருமானார் ரௌலட் சட்டத்தை ஒழிக்கச் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தோற்றுவித்தார். இவ்வியக்கத்தின் பயனாக 1919-ம் வருஷம் ஏப்ரல் மாதம் ஆறாந்தேதி முதல் பதின்மூன்றாந்தேதி வரை இந்தியாவில் பல செயல்கள் நிகழ்ந்தன. இந்தியாவின் சுதந்திரத்திற்கு அவ்வாரம் அடிகோலியது என்று கூறலாம். அவ்வாரத்தை நினைவூட்டி ஜனங்களுக்குச் சுதந்திரத் தாகத்தை எழுப்புவதற்காகவே ஒவ்வோர் ஆண்டும் சத்தியாக்கிரக வாரம் நாடெங்கணும் கொண்டாடப்படுகிறது. 1919-ம் வருஷத்துச் சத்தியாக்கிரக வாரத்தில் டையரும் ஓட்வியரும் ஆன்ம பலத்தின் மீது மிருகபலத்தை ஏவினர். ஜலியன்வாலா பாக்கில் நஞ் சகோதரர்கள் டையரின் குண்டுகளுக்கு இரையான வரலாற்றை இன்னும் ஒவ்வோர் இந்தியனும் நினைந்து நினைந்து உருகுகிறான்; இந்தியாவின் பிற்கால சுதந்திரத்திற்காக ஆவிநீத்த அவ்வீரர்களைத் தொழுது நிற்கிறான்.

இறுதியில் ஆயுதபலம் ஆன்மபலத்திற்குப் பணிந்து விட்டது. சத்தியாக்கிரக இயக்கத்தோற்றத்தினால் ரௌலட் சட்டம் இருப்பிடம்தெரியாமல்மறைந்துகொண்டது. இச்சத்தியாக்கிரக வாரமே உலகத்தின் கவனத்தை இந்தியாவின் மீது திருப்பியதால் அவ்வாரத்துக்கு வணக்கஞ் செலுத்துகிறோம்.

இன்று தொடங்கி அடுத்த வெள்ளிக்கிழமையோடு முடிவுறும் சத்தியாக்கிரக வாரத்தை ஒவ்வொருவரும் கொண்டாட வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம். சத்தியத்தை நிலைநாட்ட விரும்புவோர்-அன்பைப் பரப்ப முயல்வோர் - அஹிம்சையைக் கடைப்பிடித்து நடக்கக்கருதுவோர் - இவ்வாரத்தைக் கொண்டாடல் வேண்டும். தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியார் இவ்வார சம்பந்தமாக நிறைவேற்றியுள்ள தீர்மானங்களை நேயர்கள் ஊன்றிக் கவனிப்பார்களாக. தமிழ் நாட்டிலே பிறந்த ஒவ்வொருவரும் தமது நாட்டின் தற்போதைய நிலையை உன்னி, இவ்வாரத்தில் நாட்டின் விடுதலைக்காக உழைப்பார்களாக. நமது ஊக்கத்திலேயே, நமது உழைப்பிலேயே இந்தியாவின் விடுதலை தங்கி நிற்கிறது என்பதை ஒவ்வொரு தேசபக்தரும் உணர்ந்து நடப்பாராக. வந்தேமாதரம்.

## பொருளில்லா வாதம்

நியாயவாதித் தொழிலில் லார்ட் ரெடிங் அதிக பணம் சம்பாதித்தார் என்று சொல்லப்படுகிறது. வாதம் செய்வதில் திறமையில்லாமல் இவர் ஏராளமான பணத்தைச் சம்பாதித்திருக்கமுடியாது. ஆனால் இந்தியாவுக்கு வந்து இராஜப் பிரதிநிதி பதவியை ஏற்றுக்கொண்ட பிறகு இவர் கூறும் வாதங்கள் பொருளற்றனவாகவே முடிகின்றன. உப்புவரியைத் தம்முடைய விசேஷ அதிகாரத்தால் உயர்த்தியதற்கு இவர் நீண்டதொரு சமாதானம் கூறியிருக்கிறார். இந்த உப்பு வரி அநேக ஆண்டுகளாக உயர்ந்தேயிருந்ததென்றும் சென்ற 1916-ம் வருஷ முதலே ஒன்றே கால் ரூபாயாகக் குறைக்கப்பட்டதென்றும் ஆதலின் இப்பொழுது இவ்வரியை உயர்த்தினால் ஏழைஜனங்களுக்கு அதிக கஷ்டம் உண்டாகாதென்றும் முதல் சமாதானம் கூறுகிறார். உணவுப்பொருள்கள் யாவும் இப்பொழுது குறைந்தவிலையில் விற்கின்றன வாதலினால் இவ்வரி உயர்வினால் ஏழை மக்களுக்கு அதிக கஷ்டம் உண்டாகாதென்பது இரண்டாவது சமாதானம். மார்ச்சு மாத முதற்கொண்டு இவ்வரி கிரமமாக வசூலிக்கப்பட்டு வருவதால் ஜனங்கள் இதனால் அதிக கஷ்டப்படவில்லையென்பது தெரிகிறதென்றும் இவர் கூசாமல் கூறுகிறார். இவ்வாதங்களைநோக்கின், இங்கிலாந்தின் பிரதம நீதிபதியாயிருந்த லார்ட்ரெடிங்கா இந்தியாவின் தற்போதைய ஆட்சிமுறைக்குத் தலைமை வகிக்கிறார் என்று சந்தேகம் தோன்றும்.

உப்பு வரியை உயர்த்தக் கூடாதென்று வாதம் புரிந்த இந்தியச் சட்டசபை அங்கத்தினர்கள் அரசியல் அறிவில்லாதவர்கள் என்று லார்ட் ரெடிங் எண்ணி விட்டாரோ என்னவோ தெரியவில்லை. 1916-ம் வருஷத்திற்கு முன் உப்பு வரி உயர்ந்திருந்த தென்பதையும், மார்ச் மாதம் முதற்கொண்டு ஜனங்கள் எவ்வித அருவருப்பும் காட்டாமல் இவ்வரிக்கு உட்பட்டு வருகிறார்களென்பதையும் இந்தியச் சட்டசபை அங்கத்தினர்கள் அறியாமற் போகவில்லை. இந்தியாவிலுள்ள ஏழை மக்களின் நிலைமை இந்தியர்களுக்கே தெரியும். இந்தியாவிலுள்ள படித்த வகுப்பினர் சிறு தொகையினரே யென்றும் இவர்கள் பாமர ஜனங்களின் உண்மைப் பிரதிநிதிகளாக மாட்டார்களென்றும் அதிகாரவர்க்கம் அடிக்கடி கூறுவதுண்டு. ஆனால் உப்பு வரி விஷயத்தில் பாமர ஜனங்களின் உண்மைப் பிரதிநிதியாக யார் விளங்குகிறார் என்பதை நேயர்களே ஊகித்துக் கொள்ளலாம்.

இந்தியாவின் நன்மையை உத்தேசித்தே இவ்வரி உயர்வுக்குத் தாம் சம்மதித்ததாக லார்ட் ரெடிங் கூறுவது விநோதமாகவே இருக்கிறது. இவ்வரி உயர்வை எதிர்த்த இந்தியச் சட்டசபை அங்கத்தினர்கள் இந்தியாவின் நன்மையைக் கருதவில்லையா? இந்தியாவின் நன்மை லார்ட் ரெடிங் என்ற ஒருவருடைய உள்ளத்திலே மட்டும் தங்கி நிற்கிறதா?

இனிச் சட்டசபை அங்கத்தினர்கள் என்ன செய்யப் போகிறார்கள்? இன்னும் சிலருக்கு விண்ணப்பப் பைத்தியம் நீங்கவில்லை யென்று தெரிகிறது. காமன்ஸ் சபையாருக்கு விண்ணப்பம் செய்து கொண்டால் அதனால் பரிகாரம் உண்டாகும் என்று இவர்கள் நம்புகிறார்கள். இதற்கான முயற்சிகளும் நடைபெற்றுக் கொண்டு வருவதாகத் தெரிகிறது. இந்தப் பாழும் விண்ணப்ப உணர்ச்சி இந்த மிதவாதிகளை விட்டு என்று நீங்குமோ தெரியவில்லை. தற்போதைய காமன்ஸ்சபையின் அமைப்பு இவர்களுக்கு நன்கு தெரியும். குறுகிய கட்சியினரைப் பெரும்பான்மையோராகக் கொண்ட இச்சபையினால் ஏதேனும் நன்மை உண்டாகும் என்று இவர்கள் உண்மையில் நம்புகிறார்களா? பீலின் பேச்சையும் விண்டர்டனின் வாதத்தையும் யேட்டின் இரக்கமில்லாக் கூற்றையும் கேட்ட பிறகும் இவர்களுக்கு விண்ணப்பத்தில் நம்பிக்கை இருப்பது விநோதமாகவே இருக்கிறது.

இராஜப் பிரதிநிதியின் அதிகாரமே மேலுயர்ந்து விட்டது. ஜனப்பிரதிநிதிகளின் வாக்கு கீழே சென்று விட்டது. இனி அரசியல் வாதிகள் என்ன செய்யப் போகிறார்கள்? இப்பொழுதேனும் ஒத்துழைப்பின் பயனற்ற தன்மையை உணரலாகாதா?

## அநுபவமுள்ள கவர்னர்

இந்தியாவில் நிருவாக அநுபவம் தமக்கு அதிக முண்டென்று அடிக்கடி லார்ட் வில்லிங்டன் பெருமை பாராட்டிக் கொள்வதுண்டு. இவருடைய திறமையை அதிகார வர்க்கத்தினர் தவிர வேறு எவரும் மெச்சிக் கொண்டதாக நமக்குத் தெரியவில்லை. ஜனநாயக குணம் இவரிடத்தில் மிகுதியும் பொருந்தி யிருப்பதாக ஒரு சாரார் கூறிக் கொண்டு வருகின்றனர் என்பதை நாம் அறிவோம். ஆனால் சமீபத்தில் சென்னைச் சட்டசபையில் ஆஜர்படுத்தப்பட்ட வரவு செலவுக் குறிப்பு சம்பந்தமாக அங்கத்தினர்கள் நிறைவேற்றிய தீர்மானங்களுக்கு இவர் செய்திருக்கும் மரியாதையைக் கொண்டு இவருடைய ஜனநாயக தத்துவத்தை நன்கு உணரலாம்.

வரவு செலவுக் குறிப்பு வாதத்தின் போது, தொழிலிலாகா நிருவாகத்திற்காகக் கேட்கப்பட்ட தொகையில் சுமார் ஒன்பதரை லட்சம் ரூபாயையும் ஏஜென்சி பிரதேச சம்பந்தமாகக் கேட்கப்பட்ட சுமார் முப்பத்து மூன்று லட்சம் ரூபாயையும் சட்டசபையார் நிராகரித்து விட்டனர். கவர்னர், சீர்திருத்தச் சட்டத்தின் கீழ்த் தமக்குள்ள விசேஷ அதிகாரத்தைக் கொண்டு மேற்படி செலவினங்கள் அவசியம் இருக்க வேண்டுமென்று தீர்மானித்து விட்டார். சட்டசபையாருடைய தீர்மானங்களுக்கு என்ன மரியாதை! தம் செயலுக்கு நீண்டதொரு சமாதானமும் கூற முற்பட்டு விட்டார். இதுவே ஆச்சரியம். இப்பொழுதுள்ள சென்னைச் சட்டசபையில் அமிதவாதிகளாவது கிளர்ச்சிக் காரர்களாவது கலகக்காரர்களாவது அடங்கி யிருக்கிறார்கள் என்று லார்ட் வில்லிங்டன் துணிந்து கூறமாட்டார் என்றே கருதுகிறோம். இவர்களுக்குச் சட்டத்திற் குட்பட்டு நடக்கவேண்டுமென்ற விருப்பமும் அரசாங்கத்தாருடைய ஆட்சிமுறையைத் தடைப்படுத்தக் கூடாதென்ற நல்லெண்ணமும் இருக்கிறதென்பதை இவரால் மறக்க முடியாதென்பதும் திண்ணம். அங்ஙனமிருக்க இத்தகையவருடைய தீர்மானத்தையே லார்ட் வில்லிங்டன் நிராகரிக்கத்துணிந்தாரெனில் நாம் அதிகமாக ஒன்றுங் கூறுவதற்கில்லை. ஆனால் தங்களுடைய தீர்மானம் நிராகரிக்கப்பட்டதைக் குறித்துச் சென்னைச் சட்டசபை அங்கத்தினர்கள் அலறப்போவதில்லை யென்பதை நாம் அறிவோம். உப்புவரியைக்கவர்னர் ஜெனரல் உயர்த்தி விட்டதைப்பற்றி இந்தியச் சட்டசபை அங்கத்தினர்கள் தங்களுக்குள்ளேனும் முணுமுணுத்துக் கொண்டார்கள். அச்செயலையும் சென்னைச் சட்டசபை அங்கத்தினர்கள் செய்ய மாட்டார்களென்பது நிச்சயம். ஆனால் இந்தக் காரணத்தைக் கொண்டே லார்ட் வில்லிங்டன் தமது விசேஷ அதிகாரத்தை உபயோகப்படுத்தினரா வென்று கேட்க விரும்புகிறோம். இந்தச் சில்லரைத் தொகைகளின் விஷயத்தில்கூட, சட்டசபையின் விருப்பத்தைத் தழுவி நடக்க லார்ட் வில்லிங்டன் விரும்பவில்லை. இம்முறையேனும் சட்டசபையில் ஆடம்பரமாக வீற்றிருக்கும் கனவான்கள் ஒரு பாடங் கற்றுக் கொள்ளலாம். ஆனால் அவர்கள் கற்றுக்கொள்ள விரும்புவார்களா?

சட்ட சபையில் புகுந்து ஆரவாரம் செய்ய வேண்டுமென்று எண்ணுவோர் இதனின்றேனும் சட்டசபைப் பிரவேசத்தின் பயனற்ற தன்மையை உணர்வரா?

இக்கட்டுரையை எழுதி முடித்த பிறகு சட்டசபையில் லார்ட் வில்லிங்டன் செய்த உபந்நியாசத்தைப் பார்க்கலானோம். ஆடம்பரமாகப் பேசும் வழக்கமுடைய இவர் இம்முறை அடங்கிப் பேசியிருக்கிறார் என்றே கூறவேண்டும். ஆனால் தற்புகழ்ச்சி என்பது இப்பிரசங்கத்தில் இல்லாமல் போகவில்லை. மாண்டேகு செம்ஸ்பர்ட் சீர்திருத்தம் இம்மாகாணத்தில் வெற்றியுற்றதற்காக இவர் மகிழ்ந்து கொள்கிறார். இவருடைய விருப்பத்துக்கிணங்கி நடக்கும் மந்திரிமார்களோடு இவர் சீர்திருத்தம் வெற்றியடைந்து விட்டது என்று தமக்குள்ளேயே மகிழ்ந்து கொள்வதை நாம் தடை செய்யவில்லை. ஆனால் சீர்திருத்தத்தை ஜனங்கள் ஒரு பொருட்படுத்தவில்லை யென்ற உண்மையை இவருக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். தம்முடைய நேரான நிருவாகத்துக்கு உதவி செய்த மந்திரிமார்களையும் மற்ற உத்தியோகஸ்தர்களையும் சட்டசபை அங்கத்தினர்களையும் புகழ்ந்து கூறுகிறார். சட்டசபை அங்கத்தினர்கள் இதனைக்கேட்டு கை கொட்டினார்கள் என்றே கருதுகிறோம். ஆனால் லார்ட் வில்லிங்டனுடைய உபந்நியாசத்திலிருந்து ஒரே ஒரு வாக்கியத்தை மாத்திரம் இங்கெடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

> "சார்ஜண்ட்-அட்-ஆர்ம்ஸ் என்ற உத்தியோகஸ்தரை நியமிக்கும் விஷயமாக நானும் சபைத்தலைவரும் யோசனை கூட செய்யாதபடி அவ்வளவு நேசப்பான்மையுடன் இச்சபையின் வாதங்கள் நடைபெற்றன வென்பதைக் குறித்து எனக்கு அதிக திருப்தி ஏற்பட்டிருக்கிறது."

குறிப்பு:—சபை அங்கத்தினர் எவரேனும் சட்ட விரோதமாக நடந்து கொண்டால் அவரை தலைவருடைய கட்டளையின் பேரில் வெளியே தள்ளுவதற்கென்று நியமிக்கப்படும் ஓர் உத்தியோகஸ்தருக்கு சார்ஜண்ட்-அட்-ஆர்ம்ஸ் என்று பெயர்.

இவ்வாக்கியத்தை முடித்ததும் சபை அங்கத்தினர்கள் நகைத்தார்கள் என்று தெரிகிறது. எப்பொருள் கொண்டு இவர்கள் நகைத்தார்கள் என்பது நமக்கு விளங்கவில்லை. இவ்வாக்கியத்தின் உட்பொருளை இவர்கள் தெரிந்துகொள்ளவில்லையானால் அதற்காக நாம் இரங்குகிறோம்.

## லார்ட் லிட்டனின் மனப்பான்மை

கல்கத்தா சர்வகலாசாலைக்கு ஸர் அஷுடோஷ் முகர்ஜி என்ற அறிஞர் நெடுங்காலமாக வைஸ் சான்ஸலர் பதவியை வகித்துக் கொண்டு வந்தார். ஆனால் இவர் சமீபத்தில் விலக ஸ்ரீமான் பூபேந்திரநாத் வசு இப்பதவியில் நியமிக்கப்பட்டிருக்கிறார். ஸ்ரீமான் முகர்ஜி தம் பதவியினின்று விலகியதன் சம்பந்தமாக இவருக்கும் லார்ட் லிட்டனுக்கும் சில கடிதப் போக்கு வரவுகள் நடைபெற்றிருக்கின்றன. அவைகளில் சில விநோதமான பாகங்களை மாத்திரம் ஈண்டெடுத்துக் காட்டுகிறோம். லார்ட் லிட்டன், ஸ்ரீமான் முகர்ஜிக்கு எழுதிய கடிதத்தின் ஒரு பாகம் வருமாறு,—

> "சென்ற சில மாதகாலமாக நீங்கள் நடந்துகொண்டுவரும் பான்மை, உங்களை மறுபடியும் வைஸ் சான்ஸலர் பதவிக்கு நியமியாதபடி என்னைத் தூண்டுகிறது. இதுவரை நீங்கள் எனக்கு எவ்வித உதவியும் செய்ததில்லை. அதற்கு மாறாக எங்களுக்கு விரோதமாக நீங்கள் எல்லாவித முறைகளையும் கையாண்டிருக்கிறீர்கள். எங்களுடைய எண்ணங்களையும் நோக்கங்களையும் நீங்கள் திரித்துக் கூறியிருக்கிறீர்கள். உங்களுடைய நண்பன் என்ற முறையிலேனும் சான்ஸலர் என்ற முறையிலேனும் நீங்கள் என்னிடம் வந்து சர்வகலாசாலை மசோதாவை விருத்தி செய்வதற்கான வழியில் யோசனைகள் சொல்லாமல், அரசாங்கத்தாருக்கு விரோதமாகப் பத்திரிகைகளில் வியாசங்கள் வெளி வரும்படி தூண்டினீர்கள். எங்களுடைய (சர்வகலாசாலை) மசோதாவை எதிர்க்கும்படி ஸர்மைக்கல் சாட்லருக்கும் இந்தியா அரசாங்கத்தாருக்கும் அஸ்ஸாம் அரசாங்கத்தாருக்கும் விண்ணப்பம் செய்து கொண்டீர்கள். * * * அரசாங்கத்தாருக்கு விரோதமாக வேலை செய்ய மாட்டீர்களென்பதை, எங்களுடைய மசோதா தோற்றுப் போகும்படி வேறுவிதமான முறைகளை அநுசரிப்பதில்லை யென்பதை நீங்கள் உறுதி கூறுவீர்களானால் உங்களை மறுபடியும் வைஸ் சான்ஸலர் பதவியில் நியமிப்பதைப்பற்றி என் மந்திரியுடன் யோசிப்பேன்."

இதற்குப் பதிலளிக்கு முகத்தான் ஸர் அஷுடோஷ்முகர்ஜி விடுத்த கடிதத்தில் காணப்படும் முக்கியமான பாகம் வருமாறு:—

> "உங்களுடைய அரசாங்கத்தின் விருப்பப்படி நான் நடந்துகொள்ள வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். சர்வகலாசாலை மசோதாவைப் பற்றி நான் கொண்டிருக்கும் அபிப்பிராயம் சில மாத காலமாகத் தங்களுக்குத்தெரியும். உங்களையாவது உங்களுடைய மந்திரியையாவது சந்தோஷப்படுத்த வேண்டுமென்று நான் முயற்சிசெய்யவில்லை யென்பதுண்மை. ஆனால் சர்வகலாசாலையின் நன்மை ஒன்றே என் உள்ளத்தின் முன் நின்றது. நீங்களாவது உங்கள் மந்திரியாவது என்னை விரும்பவில்லை யென்பதை நான் அறிவேன். நாங்கள் மனிதர்களாக இருக்க வேண்டுமென்று நீங்கள் கூறுகிறீர்கள். அச்சமின்றித் தம் மனச்சாட்சிப்படி நடக்கும் ஒருவரைப் பார்க்க உங்களுக்குப் பிடிக்கவில்லை. உங்களுடைய அரசாங்கத்துக்குக் கீழ்ப்படிந்து நடக்கக் கூடிய ஒரு வைஸ்சான்ஸலரை நியமிப்பது கஷ்டம் என்று நான் கூற முன் வரவில்லை. அங்ஙனம் நியமிக்கப்பட்ட ஒருவர் உங்கள் அரசாங்கத்தார் ஆதரவை பெற்றிருக்கலாம். ஆனால் செனட்டின் விசுவாசத்தை அவர் பெற முடியாது. * * * உங்களுடைய நிபந்தனைப்படி மறுபடியும் வைஸ்சான்ஸலர் பதவியை ஏற்றுக் கொள்ள நான் மறுக்கிறேன்."

சான்ஸலருக்கும் வைஸ் சான்ஸலருக்கும் உள்ள நட்புரிமையை நேயர்கள் கண்டு கொள்வார்களாக. ஸர் அஷுடோஷ்முகர்ஜி பெரிய அறிஞர் என்பதை மட்டும் இங்குக் குறிப்பிட விரும்புகிறோம். இந்த நிலைமையில் ஸ்ரீமான் பூபேந்திரநாத்வசு வைஸ் சான்ஸலர் பதவியை ஏற்றுக் கொண்டது அவமானம்.

## இடியேறு

### ஜாக்லுல்பாஷாவின் விடுதலை

எகிப்திய தேசியக் கட்சித் தலைவரான ஸ்ரீமான் ஜாக்லுல்பாஷா விடுதலையாகி விட்டார். லார்ட் அலன்பியே இதற்குக் காரணராயிருந்தார் என்றுசொல்லப்படுகிறது. பார்லிமெண்டிலுள்ள தொழிற்கட்சி அங்கத்தினர்களும் ஜாக்லுல் பாஷாவை விடுதலை செய்து எகிப்துக்குச் சுதந்தரத்தைக் கொடுத்துவிட வேண்டுமென்று தீர்மானம் செய்து பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்கு அனுப்பினர். ஸ்ரீமான் ஜாக்லுல் பாஷா இதுகாலை பிரான்சில் இருக்கிறார் என்று அறிகிறோம். எகிப்துக்கு முழுச் சுதந்தரத்தைக் கொடுப்பதற்கு அறிகுறியாக ஸ்ரீமான் ஜாக்லுல் விடுதலை செய்யப்பட்டாரா வென்ற ஒரு கேள்வி இப்பொழுது பிறந்திருக்கிறது.

### கிளர்ச்சிக்காரர்களா?

பிரிட்டிஷ் பத்திரிகைகள் தங்கள் இயற்கை குணத்தைச் சிறிதும் விட்டுக்கொடுப்பதில்லை. அதிகாரவர்க்கத்தினருடைய செயலுக்கு விரோதமாக யாரேனும் ஒரு வார்த்தை கூறினால் உடனே இவை கூச்சலிட ஆரம்பித்து விடுகின்றன. உப்பு வரி உயர்வு கூடாதென்று இந்தியச் சட்டசபை அங்கத்தினர் கூறினார்களல்லவா? இங்ஙனம் இவர்கள் கூறியதற்குக் காரணம் கிளர்ச்சிக்காரர்களின் தீச்செயலே யென்று லண்டன் பத்திரிகை ஒன்று கூறுகிறது. அதிகாரவர்க்கத்தினருடைய செயலை ஆதரிப்பதற்கு இஃதொரு நல்ல வழி. இந்த உப்பு வரி உயர்வில் பாமர ஜனங்கள் கவலை கொள்ளவேயில்லை யென்றும் கிளர்ச்சிக்காரர்களே ஜனங்களுக்கு அதிருப்தி இருப்பதாக ஆரவாரம் செய்கிறார்களென்றும் பிரிட்டிஷ் பத்திரிகைகள் எண்ணியிருக்கின்றன போலும்! இந்தியாவின் உண்மை நிலைமையை அறியாத இப்பத்திரிகைகளின் பிதற்றலை இந்திய நிருவாகிகள் ஆதரவாகக் கொள்வதே நமக்கு வியப்பாயிருக்கிறது.

### நடு நிலைமை

மத விஷயங்களில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் நடு நிலைமை வகிப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் கிறிஸ்தவ மத ஸ்தாபனத்திற்கென்று தனியான இலாகாவொன்று இருப்பதை நேயர்கள் அறியாமலிருக்க மாட்டார்கள். இந்த இலாகாவிற்கு இந்தியாவிலுள்ள எல்லா மதத்தினரும் செலுத்தும் வரியிலிருந்தே பணம் செலவழிக்கப்படுகிறது. இஃதென்ன நியாயமென்பதை இன்னும் எந்தச் சட்டசபை அங்கத்தினரும் கேட்கத் துணியவில்லை. இந்த இலாகாவுக்கென்று 1913-14-ம் வருஷத்தில் 19,50,000 ரூபாய் செலவழிக்கப்பட்டது. 1922-33-ம் வருஷத்தில் 33,83,000 ரூபாய் செலவழிக்கப்பட்டது. ஒழெட்டு வருஷத்திற்குள் சுமார் பன்னிரண்டு லட்சம் ரூபாய் அதிகமாயிருக்கிறது. மத விஷயங்களில் நடு நிலைமை வகிப்பதாகக் கூறிக் கொள்ளாமல் இந்த இலாகாவுக்குப் பணம் செலவழிக்கப்பட்டால் அப்பொழுது நாம் அதிகமாக ஆட்சேபிக்க மாட்டோம்.

### நல்ல காரணம்

ரெவரெண்ட் கே. ஆர். கோபால ஐயர் 'ஹிந்து' பத்திரிகையில் பின்வருமாறு எழுதுகிறார்:—

> "ஸர் ஆர்தர் ஹாவ்லக் சென்னை மாகாணக் கவர்னராயிருந்தபோது எஸ்பிளனேட்டில் ஒய். எம். சி. ஏ. கட்டிடம் கட்டுவதற்காக அரசாங்கத்தார் இருபத்து மூவாயிரம் ரூபாய் நன்கொடையாக அளித்தனர். அப்பொழுது சட்டசபை அங்கத்தினர் ஒருவர் கிறிஸ்தவ ஸ்தாபனமொன்றுக்கு ஏன் இவ்வளவு பெருந் தொகை கொடுக்கப்பட்டதென்றும் பார்த்தசாரதி சுவாமி கோயிலுக்காவது திருவல்லிக்கேணியில் ஒரு மசூதி கட்டவாவது ஏன் ஒரு பைசாவும் கொடுக்கவில்லையென்றும் கேட்டார். அதற்குச் சில காரணங்கள் இருக்கின்றன வென்று அரசாங்கத்தார் குறிப்பாகப் பதில் கூறி விட்டனர். மற்றொரு கூட்டத்தில் வேறோர் அங்கத்தினர் இதே விஷயத்தைப்பற்றி மறுபடியும் கேட்க, ஒய்.எம்.சி.ஏ.வில் வியாபார சம்பந்தமான பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன வாதலாலும் சைனாபஜார்ரோட்டில் பெரிய கட்டிடங்கள் ஏற்படுவதை ஆதரிக்க விரும்புவதாலும் பண உதவியதாக அரசாங்கத்தார் பதில் கூறினர். கிறிஸ்தவ மதத்தைச் சாராத வேறு ஸ்தாபனம் ஏதேனும் இத்தகைய உதவியைப் பெற்றிருக்கிறதா வென்று கேட்க இல்லையென்று பதில் கூறப்பட்டது."

இதைப்பற்றி நாம் வியாக்கியானம் செய்ய வேண்டுமோ?

### மோடார் வண்டியும் இல்லை.

முன்னர்ச் சென்னைக் கவர்னராயிருந்த லார்ட் ஆம்தில் என்பவருடைய குமாரர் ஸ்ரீமான் ரஸ்ஸல் என்பவர் ஒரு பெண்ணை விவாகம் செய்து கொண்டார். விவாகமான சில காலம் கழித்து இவள் ஓர் ஆண்மகவு ஈன்றாள். ஸ்ரீமான் ரஸ்ஸல் இந்தக் குழந்தை தனக்குப் பிறந்ததல்லவென்றும், இந்த விவாகத்தை ரத்து செய்துவிட வேண்டுமென்றும் ஒரு வழக்குத் தொடுத்திருக்கிறார். இவ்வழக்கு நெடுநாளாக நடைபெற்று வருகிறது. இவ்வழக்கில் லார்ட் ஆம்தில் ஒரு சாட்சி. அவர் சாட்சியத்தின் ஒரு பாகத்தில் கூறிய பின்வரும் வாக்கியங்கள் வருத்தந்தரக் கூடியனவா யிருக்கின்றன:—

> "நான் ஒரு பணக்காரனல்ல. இந்த வழக்கின் சென்ற ஈரங்கிக்கு நானும் என் மகனும் பணம் சேகரித்துச் செலவழிக்க வேண்டியதாயிற்று. அதனால் எங்களுக்கு அழிவு ஏற்பட்டதென்றே சொல்லலாம்."
>
> நியாயவாதியின் வினா:— நீங்கள் மோடார் வண்டி வைத்துக்கொண்டிருக்கிறீர்களா?
>
> லார்ட் ஆம்தில்:— மோடார்வண்டி வைத்துக் கொள்ள எனக்குச் சக்தியில்லை.

மாதம் பதினாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டு கவர்னராயிருந்த லார்ட் ஆம்தில் ஒரு மோடார் வண்டி வைத்துக் கொள்ளச் சக்தியில்லையென்று கூறுகிறார். பரிதாபம்!

### உத்தம அரசன்

'வெல்பேர்' என்ற பத்திரிகையில் பின்வரும் குறிப்பு காணப்படுகிறது:—

> "இத்தலி தேசத்தில் ஓர் அரசன் இருந்தான். திடீரென்று அவன் இருந்த இடத்தில் பிளேக் வியாதி உண்டாயிற்று. ஜனங்கள் இவ்வியாதியால் துன்புற்றனர். உடனே அவனுடைய ஆஸ்தானிகர்கள், அரசனை வேறிடத்திற்கு ஓடிப் போகும்படி கூறினார்கள். அப்பொழுது அரசன் அவர்களைப் பார்த்து பாதுவா என்ற நகரத்தில் ஜனங்கள் சந்தோஷமாயிருக்கிறார்கள்; நேபில்ஸில் அவர்கள் சாகிறார்கள்; ஆதலின் நான் நேபில்ஸுக்கே செல்கிறேன்" என்று கூறினான்."

இம் மன்னன் கூறிய உரையின் பொருளை நாம் விளக்க வேண்டுவதில்லை. இத்தகைய வேந்தர் பலர் நமது நாட்டில் பண்டைக் காலத்தில் ஆட்சிபுரிந்து வந்தார்.

### மரணத்திற்குக் காரணம்

அமெரிக்கா ஐக்கிய மாகாணத்தில் ஆயிரத்துக்குச் சுமார் எட்டு பேர் வீதம் இறந்து போகின்றனர் என்று 1922-ம் வருஷத்துக் கணக்கின்படி தெரிகிறது. ஆனால் இந்தியாவின் மரணவிகித மென்ன? வங்காளத்தில் மட்டும் 1921-ம் வருஷத்தில் ஆயிரத்துக்குச் சுமார் முப்பது பேர் வீதம் மரண மடைந்திருக்கின்றனர் என்று சுகாதார அதிகாரியின் அறிக்கை கூறுகிறது. சென்னை, பர்மா, பம்பாய், அஸாம் ஆகிய நான்கு மாகாணங்களில் மேற் கூறப்பட்டவரில் சிறிது குறைவான பேரே மரணமடைந்திருப்பதாகத் தெரிகிறது. மற்ற மாகாணங்களில் வங்காளத்தை விட அதிகமான மரணங்களே ஏற்பட்டிருக்கின்றன. சுகாதார இலாகா மந்திரிமார் வசத்தில் வந்து விட்டதென்று கூறப்படுகிறதேயன்றி இம்மாற்றத்தினால் ஏற்பட்ட பெரிய நன்மைகள் என்னவென்பதை இன்னும் எவரும் எடுத்துக் காட்டவில்லை.

### ஹிந்துமத தருமஸ்தாபன மசோதா

பானகல் ராஜா வெற்றி பெற்றுவிட்டார். ஹிந்துமத தருமஸ்தாபனமசோதா சட்டசபையில் நிறைவேறிவிட்டது. மடாதிபதிகளும் ஆலய தருமகர்த்தர்களும் தேவஸ்தானங்களிற் சம்பந்தப்பட்டுள்ள வேறுபலரும் இந்தமசோதா சட்டமாகக் கூடாதென்று எவ்வளவோ முயற்சிசெய்தார்கள். ஆனால் மந்திரியார், கட்சிபலத்தைக் கொண்டு மசோதாவைச் சட்டமாக்கிவிட்டார். இம்மசோதா பரிசீலனைக் கமிட்டியாரால் ஆராய்ச்சி செய்யப்பட்டதன் பயனாகவும் சட்டசபையார் செய்த திருத்தப்பிரேரபணைகளின் பயனாகவும் அதிகமாற்றம் நடையவில்லை என்றே கூறலாம். எந்தெந்த அமிசங்கள் ஆட்சேபிக்கப்பட்டனவோ அவைகளிற்பல இன்னும் இருந்துகொண்டு தான் இருக்கின்றன. ஹிந்து மதத்துக்கும், மடாதிபதிகளுக்கும் ஆலயபரிபாலகருக்கும் நமது அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறோம்.

### அகில இந்திய முஸ்லீம் லீக்

லட்சுமணபுரியில் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் பிறகு காங்கிரஸ் கூடும் இடத்திலேயே முஸ்லீம்லீக்கும் கூடிவந்தது. ஆனால் கயை காங்கிரஸின்போது இந்த மகாநாடு அங்குக் கூட முடியாமற் போய்விட்டது. இப்பொழுது சமீபத்தில் லட்சுமணபுரியில் ஸ்ரீமான் பர்கிரியின் தலைமையின் கீழ் இம்மகாநாடு நடைபெற்றது. இதன் நடைமுறைகளை மற்றொரு பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம். இம்மகாநாடு திடீரென்று முடிவு பெற்றதற்காக நாம் வருந்தாமலிருக்க முடியவில்லை. இனியேனும் காங்கிரஸ் கூடுமிடத்தில் இம்மகாநாடும் கூடி ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமையைப் பலப்படுத்தும் என்று உறுதியாக நம்புகிறோம்.

### பறிமுதல் செய்யப்பட்டது

ஸ்ரீமான் கிருஷ்ணசாமி சர்மாவால் எழுதப்பட்ட 'மாஜினி' என்ற புத்தகத்தைச் சென்னை அரசாங்கத்தார் பறிமுதல்செய்திருக்கின்றனர். இதற்குக்காரணம் என்னவென்பது நமக்குப்புலப்படவில்லை. மாஜினியைப்பற்றிய சரித்திரங்கள்எண்ணிறந்தன. இவைகள் பல மொழிகளில் வெளி வந்திருக்கின்றன. இவைகளைக் கடிந்தார் எவருமிலர். ஆனால் ஜனநாயகுணம் பொருந்திய லார்ட் வில்லிங்டன் மட்டும் ஸ்ரீமான் கிருஷ்ணசாமி சர்மா நூலின் மீது ஏன் கோபங்கொள்ளவேண்டுமோ தெரியவில்லை. லார்ட் வில்லிங்டனுடைய தாய் நாடே மாஜினிக்கு அடைக்கலம் கொடுத்ததென்பதையும் அவருடைய தாய் மொழியிலேயே மாஜினியைப்பற்றி எண்ணிறந்த சரித்திரங்கள் வெளி வந்திருக்கின்றனவென்பதையும் அவருக்கு நாம் இச்சமயத்தில் நினைவூட்டாமலிருக்க முடியவில்லை.

### அடுத்த தேர்தல்

அடுத்த தேர்தல் அக்டோபர் மாதத்தில் நடைபெறுமென்று லார்ட் வில்லிங்டன் நிர்ணயமாகக் கூறி விட்டார். ஆகஸ்ட் மாதத்திலேயே இப்பொழுதுள்ள சட்டசபை கலைந்துவிடும். அடுத்த தேர்தலில் தமக்கு வெற்றி உண்டாகுமோ வென்று இப்பொழுதே சில அங்கத்தினர்கள் ஏக்கம் பிடித்தலைகிறார்கள் என்று அறிகிறோம். தேர்தல் முடிந்த பிறகு யார் மந்திரியாக வருவதென்பதைப் பற்றியும் ஆரவாரமான வாதங்கள் நடைபெறுகின்றனவாம். இவர் அனைவருக்கும் நமது அநுதாபம்!

### கிருஷ்ணாமிர்த லேகியம்

இப்பெயர் வாய்ந்த இனிய லேகியம் ஒரு டப்பி சுமார் ஒன்றரை மாதகாலத்துக்கு முன் எமக்கு அனுப்பப் பட்டது. இந்த லேகியத்தைச் சில பலவீனர்களுக்குத் தந்து சோதித்தோம். இரத்த விர்த்தியும், நரம்புத்தளர்ச்சி நீக்கமும், இந்த லேகியத்தால் விளைவதைக் கண்டோம். மூளைக் கொதிப்பைத் தணிப்பதற்கு இந்த லேகியம் சிறந்த ஔஷதம் என்று கூறலாம். இந்த லேகியம் பொதுவாக எல்லார்க்கும் பயன்படக் கூடியது என்பதையுங் கண்டோம். வேண்டுவோர் ஜி. செல்வபதிசெட்டியார் அண்டு கோ, பெரம்பூர் பாரக்ஸ், மதராஸ். என்னும் விலாசத்துக்கு எழுதுக. விலை டப்பி ஒன்றுக்கு ரூபா 4.

---

உலகத்தின்சவலமதம்என்றும்தாய்மதம்என்றும் பழமதம் என்றும்கருதப்படும் சைவசித்தாந்தத்தைப்பற்றி (சௌந்தரிய மகாலில்கூடிய சர்வசமய மகாநாட்டில்) உயர்திரு வேதாசல சுவாமிகள் பேசினார்கள். அவர்கள் பேச்சைக்கேட்ட பெரும்பாலார் ஏமாந்து போனார்கள். சுவாமிகள் மகாநாட்டு நிர்வாகிகளின் விருப்பத்திற்கிசைந்து தமது பிரசங்கத்தை ஆங்கிலத்தில் எழுதி வாசித்தார். அத்துடன் அவர் சைவசித்தாந்த உண்மைகள் சாதாரண ஜனங்களுக்கு விளங்க வழியின்றி மிகவும் உயர்ந்த முறையில் எழுதியிருந்தார். அதனால் கூட்டத்தில் வந்திருந்தவர்களில் பலருக்கு அவர் சொல்லிய விஷயம் விளங்கவில்லை. சுமார் பத்துப் பதினைந்து பேர்களுக்குப் பட்டிருக்கலாம். சுவாமிகள் தமிழில் பேசக் கூடாதா என்று அநேகர் வருந்தினார்கள். உலகப் பொதுமதம் ஆகப் போகிறதென்று லோகோபகாரி கூறும் ஒரு சமயத்தைப்பற்றிய பிரசங்கம் இவ்வாறு முடிந்ததுபற்றி நான்(பாரி) அளவற்றவருத்தம் அடைந்தேன்.

'லோகோபகாரி'

# தமிழ் நாட்டுக் காங்கிரஸ்

## கார்யக் கமிட்டியின் கூட்டம்

### சத்தியாக்கிரக வாரக்கொண்டாட்டம்

தமிழ் நாட்டுக் காங்கிரஸின் கார்யக் கமிட்டியின் கூட்டம் சென்றமார்ச் மாதம் 31-ந் தேதியில் காரைக்குடியிலுள்ள ஸ்ரீமான் இராய. சொக்கலிங்கம் செட்டியார் இல்லத்தில் கூடியது. ஸ்ரீமான் டி. ஆர். மகாதேவய்யர் அக்கிராசனம் வகித்தார். அக்கூட்டத்தில் திருப்புவனம் தாலுக்காவை மதுரையுடன்சேர்த்து விடுவதென்றும் உடையார் பாளையத்தை கும்பகோணம் ஜில்லாவுடன் சேர்த்து விடுவதென்றும், ஹிந்தி உபாத்தியாயரான ஸ்ரீமான் பிரதாப நாராயண வாஜபாய் கடலூர் சிறையினின்று வெளிவர விருக்கிறபடியால் அன்னாரைத் தகுதியாய் வரவேற்கக் கடலூர் காங்கிரஸ் கமிட்டியார் ஏற்பாடு செய்ய வேண்டு மென்றும் பஞ்சமர்களிடையில் காங்கிரஸ் பிரசாரஞ் செய்வதற்காகப் பஞ்சமர்களில் நால்வரைப் பிரசாரகர்களாய் நியமிக்க வேண்டுமென்றும் சிறை சென்றுள்ள ஜனுப் அப்துல் அஜிஸ் சாயப்பின் குடும்பத்திற்கு மாதந்தோறும் பத்து ரூபா உதவி செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டன. பின்னர் சத்தியாக்கிரக வாரத்தை எங்ஙனம் கொண்டாடுவதென்பதைப்பற்றிப் பின் வருந் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

### சத்தியாக்கிரக வாரம்

ஏப்ரல் 6-ந் தேதி (சத்தியாக்கிரகவார ஆரம்பம்) பட்டினி விரதம் கிடந்து கடவுளுக்குப் பிரார்த்தனை செய்ய வேண்டும். அன்றைய தினம் எவ்வளவு அரிசி செலவாகுமோ அதைத் திலகர் சுயராஜ்ய நிதிக்குக் கொடுக்க வேண்டும்.

அவ்வாரம் முழுமையிலும் பஜனைகள் நடைபெற வேண்டும். காங்கிரசுக்கு அங்கத்தினர்களைச் சேர்க்கவேண்டும். திலகர் சுயராஜ்ய நிதிக்குப் பணந்தண்டவேண்டும். தொண்டர் படைக்கு ஆட்களைத் திரட்ட வேண்டும். வகுப்பு வித்தியாசங்களையும் மத வித்தியாசங்களையும் ஒழிக்கவும் பஞ்சமர்களை நம் கூட்டங்களுக்கு ஒருவித நிபந்தனையுமின்றி வரவழைத்து அவர்களைக் காங்கிரஸில் சேரும்படியாகவும் செய்ய வேண்டும். பொதுவாக எல்லாரும் சிறப்பாக மாதர்களும் நூல் நூற்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

13-ந் தேதி (ஜலியன் வாலாபாக்தினம்) தியாகஞ் செய்ய வேண்டிய நாளாகும். அன்றை வரும்படியை திலகர் சுயராஜ்ய நிதிக்குக் கொடுக்க வேண்டும். 6-ந் தேதியிலும் 13-ந் தேதியிலும் பொதுக் கூட்டங்கள் எங்கும் நடைபெற வேண்டும்.

தேசிய வாரக் கடைசிக்குள் ஜில்லா காங்கிரஸ் சபைகளும் இதர காங்கிரஸ் சபைகளும் காங்கிஸ் குறிப்பிட்ட தொகையைத் திலகர் சுயராஜ்ய நிதிக்குச் சேர்த்து விடுவதல்லாமல் குறிப்பிட்ட அளவுக்குத் தொண்டர்களையுஞ் சேர்த்துவிட வேண்டும்.

### தலைவர்களுக்கு 144-வது பிரிவு

கார்யக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றபின் பொதுக்கூட்டம் ஒன்று கூட்டி அதில் ஜனங்களுக்குக் காங்கிரஸின் தீர்மானங்களைப்பற்றி எடுத்துரைப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால் திருப்பத்தூர் தாலுக்கா மாஜிஸ்ட்ரேட் கி. பு. கோ 144-வது பிரிவுபடி ஓர் உத்தரவு பிறப்பித்து ஸ்ரீமான்களான டாக்டர் ராஜன், முகமத், டாக்டர்வரதராஜுலுநாயுடு, ஈ.வி. ராமசாமி நாயக்கர், சுப்பிரமணிய நாயனுர், ராய. சொக்கலிங்கம் செட்டியார் ஆகிய இவர்கள் காரைக்குடி நகர எல்லைக்குள்ளும் தன் அதிகார எல்லைக்குள் இருக்கும் இடங்களிலும் உபந்யாசங்கள் செய்யக்கூடாதென்று தடுத்து விட்டார். இதன் மேல் இவர்கள் உபந்யாசங்கள் புரியவில்லையாயினும் டாக்டர் சுவாமி நாத சாஸ்திரியின் அவைத் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற அக்கூட்டத்தில் ஸ்ரீமான்கள் ரங்கநாதம், இக்னேஷியஸ் சுப்பிரமணிய ஐயர் ஆகிய இவர்கள் காங்கிரஸ் தீர்மானங்களைப் பற்றியும் ஜனங்களின் கடமையாதென்பதைப் பற்றியும் உபந்யசித்தார்கள்.

மோட்டார் வண்டிகளின் போக்குவரத்தால் தெருக்களில் அடிக்கடி நிகழும் ஆபத்துகளை அரசாங்கத்தார் கவனிக்க வேண்டுமென்ற பம்பாய் நகர பரிபாலன சபையார் ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளார்கள்.

# துருக்கி விஷயம்

துருக்கியர்கள் நேசதேசத்தினர்களுடன் படிக்கையைப்பற்றி அனுப்பியபதிலை லண்டனில் கூடிய நேசதேசத்தினர் ஆராய்ந்து பதிலனுப்பினர்கள். இதில் நேசத்தினர், பொருளாதார நிபந்தனைகளை உடன்படிக்கையுடன் சேர்த்துக் கவனியாது தனியாய்க் கவனிக்க முடியாதென்று கூறியுள்ளார்கள். மற்ற விஷயங்களைக்கூடுமானவரை நேசபாவமாய்சரிப்படுத்திக் கொள்ளலா மென்றும் துருக்கி யுடாட்டங்களை ஆரம்பிக்க லாசேனுக்குத் தன் பிரதிநிதிகளை அனுப்பவேண்டுமென்றும் அதில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. துருக்கியர் தேசநேசத்தினர் அனுப்பிய பதிலை ஏற்றுக்கொண்டு லாசேனில் திரும்பவும் மகாநாட்டை ஆரம்பிக்கலாமென்றும் ஏப்ரல் 15-ங்கூ மகாநாட்டை ஆரம்பிப்பதற்கு தகுதியான நாளா யிருக்கலா மென்றும் பொருளாதாரம் நீதிபரிபாலனம் விஷயமான நிபந்தனைகளை பூராவாக ஒப்புக்கொள்ளக் கூடவில்லை யென்றும் பதில் அளித்திருக்கின்றனர். டிரிபிசாண்ட் எனுமிடத்து அதிகாரியான ஸ்ரீமான் அலிசுக்ரிபே என்பார் தோபால் உஸ்மான் என்ற ஒருவரால் கொல்லப்பட்டார். இதற்குக் காரணம் இருவருக்கும் ஏற்பட்டிருந்த மனஸ்தாபமென்று சொல்லப்படுகிறது. கொலையாளியும் பின்னர் சிவில் துருப்புகளால் தாக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். ஸ்ரீமான் அலிசுக்ரிபே, கொல்லப்பட்டதால் கெமாலிய ஆட்சிமுறை எடுபட்டு அதற்குப் பதிலாக லாசேன் உடன்படிக்கைக்கு விரோதமான கட்சியினர் ஆட்சிமுறை ஏற்படுமென்று "ரோமாபுரியில்" கருதப்படுகிறது. வாக்காளர்க்கு கட்டுபாடற்ற ஓட் உரிமையைக் கொடுக்க அங்கோரா அரசாங்கத்தார் ஓட்டர் ஜாப்தாவை திருத்தி அமைக்க யோசனை செய்து வருகின்றனர். மத்தியதரைக் கடலினின்று யுத்தக்கப்பல்கள் அழைக்கப்பட்டு விட்டமையால் துருக்கியுடன் சமாதானம் ஏற்பட்டுவிடுவதற்கு எவ்விதத்திலும் இடமிருக்கிறதென்று ஈவினிங் ஸ்டாண்டர்டு பத்திரிகை கூறுகிறது. இப்போ 50 ஆயிரம் ஓட்டர்களுக்கு ஒரு பிரதிநிதி வீதம் இருப்பதை 25 ஆயிரம் பேருக்கு ஒரு பிரதிநிதி என்று ஓட்உரிமை சட்டத்தைத் திருத்தியமைத் திருக்கின்றனர்.

### ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் பதினெட்டாம் ஆண்டு விழா

காரியதரிசி தெரிவிக்கிறார்.

சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் 18-ம் ஆண்டு நிறைவுவிழா, நிகழும் துந்துபிஞு பங்குனிமீ 24,25,26 (6,7,8-4-23)ந் தேதிகளில் டை பேட்டை மோபிரிஸ் இராஜ வீதியிலுள்ள "குகாநந்த" நிலையத்தில் கொண்டாடப்பெறும். 7-4-23 சனிக்கிழமை மகோமகோபாத்தியாயர் பிரம்மஸ்ரீ உ.வே. சாமிநாத ஐயர் தலைமையில் மாலை 5-30 மணிமுதல் 7-30 மணிவரை ஸ்ரீமான் க. சதாசிவஞ்செட்டியார் "அப்பர் அருள் மொழி" எனும் விடயத்தைக் குறித்து உபந்யசிப்பர்.

8-4-23 ஞாயிற்றுக்கிழமைபிற்பகல்3-15க்கு ஸ்ரீமான்-கே.சுப்பிரமணியபிள்ளை அவர்கள் எம்.ஏ.,எம்.எல். அவைத் தலைமையில் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான்-வா. மகாதேவ முதலியார் அவர்கள் "நாளாயபோகாமே..." என்னும் திருப்பாசுர விளக்கம் என்பதைப்பற்றியும், திருமயிலை-ஸ்ரீ இராம கிருஷ்ண மடத்தைச் சேர்ந்த பண்டித மயில்வாகனனர் "அறிவுநெறியும் அன்பு நெறியும்" என்பதைப்பற்றியும் உபந்யாசம் செய்வார்கள்.

காங்கிரஸ் கார்யக் கமிட்டிப் பிரதிநிதிக் கூட்டத்து அங்கத்தினர்களான ஸ்ரீமான்கள் இராஜகோபாலாச்சாரியார், இராஜேந்திர பிரசாத், தேவதாஸ்காந்தி ஆகிய இவர்கள் எப்ரல் 21-ந் தேதி முதல் 30-ந் தேதி வரை கேரள மாகாணத்திலும் தமிழ்நாட்டிலும் ஆந்தரப் பிரதேசத்திலும் சுற்றுப் பிரயாணஞ் செய்வார்கள்.



# ஜெர்மானியர் ஒத்துழையாமை

பிரெஞ்சுக்காரர் ரூர்ப்பிரதேசத்தை சிறிது சிறிதாகத் தங்கள் ஆதிக்கத்திற் குட்படுத்திக் கொண்டே போகின்றனர். ஜெர்மானியரும் பிடிவாதமாகவே ஒத்துழையாமையை அனுஷ்டித்து வருகின்றனர். ஆக்கிர மிக்கப்பட்டுள்ள பிரதேசத்தின் ஒரு பகுதியாகிய லுட் விக்ஷேர் எனுமிடத்தைச் சேர்ந்த ஜெர்மன் ரெயில்வே பிரதம இன்ஸ் பெக்டருக்கு தந்தி ஒன்றை அனுப்பாத காரணத்திற்காக பிரெஞ்சு இராணுவக் கோர்ட்டார் இருபது வருடக் கடுங்காவல் தண்டனையும் இன்னோர் உத்தியோகஸ்தருக்குப் பத்துவருட தண்டனையும் விதித்துள்ளார்கள். சென்ற சனிக்கிழமையில் பிரெஞ்சுக்காரர்கள் குருப் எஃகு தொழிற்சாலையை ஆக்கிரமிக்க, எஸ்ஸனில் சிறிது சச்சரவு ஏற்பட்டது. பின்னர் பிரெஞ்சுக்காரர் தொழிற்சாலைக்கு வெளியிலிருந்த கூட்டத்தின் மீது துப்பாக்கிப் பிரயோகஞ் செய்தனர். இதன் பயனாய் 11 பேர் இறந்தும் 35 பேர் காயமடைந்தும் போனர். இதற்குப் பின்னர் பிரெஞ்சு இராணுவவீரர்ஒருவரால்ஓட்டப்பட்டவண்டியை ஜெர்மானியர்கள் வழி மடக்கி வண்டியை உடைத்து அதிலிருந்தவர்களைத் தன்புறுத்தினர்கள். பிரெஞ்சுக்காரர்கள் குருப்ஸின் மோட்டார் தொழிற்சாலையை ஆக்கிரமித்திருக்கின்றனர். குருப்ஸ் மானேஜர்களில் நால்வர் தொழிலாளர்களைப் பலாத்காரமான செயல்களைச் செய்யத் தூண்டினர்களென்று குற்றஞ் சாட்டப்பட்டு பிரெஞ்சுக்காரரால் கைதியாக்கப்பட்டார்கள். எஸ்ஸனில் பிரெஞ்சுக்காரர் நிராயுதபாணிகளான தொழிலாளர் மீது துப்பாக்கிப் பிரயோகஞ் செய்தது நியாயமல்லவென்றும் காயமடைந்த தொழிலாளர்களும் இறந்தவர்களின் குடும்பத்தாருக்கும் ஆக்கிரமிப்பினால்பாதிக்கப்பட்டிருக்கும் கம்பெனியாருக்கும் தம் அநுதாபத்தைத் தெரிவித்து ஒரு செய்தியை ஜெர்மனியின் ஜனாதிபதியும் சான்சலரும் அனுப்பியுள்ளார்.

# தாங்கநியாகாவில் இந்தியர் நிலை

### புதியவரிகள்

தாங்கநியாகா இந்தியசங்கத்தார் தெரிவித்திருப்பதில் காணப்படும் விஷயங்கள் வருமாறு:—

"யுத்தத்திற்குமுன் ஜெர்மன் கிழக்காப்பிரிக்கா என்றபெயரால் அழைக்கப்பட்டதும் இதுகாலை தாங்கநியாகாபிரதேசம் என்றும் அழைக்கப்படுவதுமான பிரதேச அரசாங்கத்தார் இம்மாதம் முதல் தேதியிலிருந்து அங்குள்ள வியாபாரிகளுக்கு மூன்று புதியவரிகளை விதித் திருக்கின்றனர். அம்மூன்று வரிகள் இலாபவரி, லைசன்ஸ்வரி, தலைமீது சாமான்களைச் சுமந்து விற்போர் கொடுக்க வேண்டிய வரி என்பனவாம். வியாபாரம் மிகவும் குறைவாய் இருப்பதால் இத்தகைய வரிகளை நிர்வகிக்கக் கூடவில்லை. இவ்வரிகளால் சிறுவியாபாரிகள் அதோகதியாய்ப் போகநேரிடும். என்ன விண்ணப்பங்கள் செய்தும் பிரயோஜனம் ஏற்படாமற்போகவே இந்தியவியாபாரிகள் கடைகளை மூடிவிட்டு லைசன்ஸ் களுக்கு மனுச்செய்து கொள்ளாமல் இருக்கிறார்கள். குடியேற்ற நாட்டு ஆபீசார் இவ்வரிகளை அமுலுக்குக் கொண்டுவருவதை நிறுத்திவைக்கவேண்டு மென்று கேட்டிருக்கிறோம்." பின்னர்வந்த செய்தியொன்றால், மேற்கூறப்பட்ட வரிகளைக்கொடுப்பதென்றும் ஆனால் இதைக்கொண்டு தாங்கள் இவ்வரிகளை ஏற்றுக்கொள்வதாக அரசாங்கத்தார் கருதக் கூடாதென்றும் இந்திய வியாபாரசங்கத்தார் தீர்மானித்திருக்கின்றனர் என்று தெரிகிறது.

# ஆமதாபாத் ஆலைத் தொழிலாளர்

### வேலை நிறுத்தம்

தங்களுடைய கூலியில் நூற்றுக்கு இருபது வீதம் குறைக்கப்பட்டதன் காரணமாய் ஆமதாபாத்திலுள்ள ஐந்து ஆலைகளைத் தவிர்த்து மற்ற ஆலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் இம்மாதம் முதல் தேதி முதல் வேலை நிறுத்தஞ்செய்துள்ளார்கள். தொழிலாளர்கள் அமைதியாகவே நடந்து கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீமான் சி. எப். ஆண்ட்ரூஸ் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் சமரசம் உண்டாக்க செய்த முயற்சிகள் பயன் கொடுக்கவில்லை. முதலாளிகள் ஸ்ரீமான் சி. எப். ஆண்ட்ருவின் பிரரேபணைகளை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார்கள். ஸ்ரீமான் சி. எப். ஆண்ட்ரூஸ் தொழிலாளர் அமைதியாய் நடந்துகொண்டு வேண்டுமென்று புத்திமதி புகட்டியுள்ளார். வேலைநிறுத்தம் இன்னும் முடிவடையாமலே இருந்துவருகிறது. வேலை நிறுத்தஞ் செய்துள்ள 45 ஆயிரம் தொழிலாளர்களில் 15 ஆயிரம் பேர் தங்கள் தங்கள் ஊருக்குப்போய்விட்டார்கள். மற்றவர் வராட்டினங்களைக் கொண்டு பிழைக்கிறார்கள். தொழிற் சங்கத்தைச்சேர்ந்த தொண்டர்கள் மதுபானக் கடைகளுக்கருகில் மறியல் செய்கிறார்கள். ஸ்ரீமதி அநசூயாபாய் தொழிலாளர் வீடுகளுக்குச் சென்று அவர்களின் நிலையைக் கவனித்து வருகிறார்.

### பெரிய குளம் தாலுக்கா

காங்கிரஸ் கமிட்டி மானேஜர் தெரிவிக்கிறார்

1923-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதியிலிருந்து மார்ச் 31-ந் தேதி முடிய பெரிய குளம் தாலுக்காவில் நடைபெற்ற வேலை வருமாறு:— 640 பேர் காங்கிரஸ் அங்கத்தினர்களாய்ச் சேர்ந்திருக்கிறார்கள். திலகர் நிதிக்கு ரூபா 593-6-0 வசூலாகி யிருக்கிறது. 41 பேர் தொண்டர் படையில் சேர்ந்திருக்கின்றனர்.

### திராவிடவைத்திய சம்மேளனம் திரிச்சிராப்பள்ளி

யோக்கியதா பத்திரம்

ஸ்ரீ கு. மதுரைமுத்து முதலியாருடைய குமாரர் ஸ்ரீ ம. நாகலிங்கம் அவர்களுக்கு 1923ஞு மார்ச்மீ 30-31 தேதிகளில் திரிசிராப்பள்ளியில் நடந்த சம்மேளனத்தில் "வைத்திய சிரோமணி" என்னும் பட்டமளிக்கலாயிற்று என்று ஒரு நிருபர் அறிவிக்கிறார்.





# பண்டைத் தமிழரின் கைத்தொழிலும் வர்த்தகமும்

(ஸ்ரீமான் ஆர். கோபாலசாமி எழுதியது)

இற்றைக்குச் சற்றேறக்குறைய இரண்டாயிரம் வருடங்களுக்கு முந்தியே தமிழ் மக்கள் நாகரிகத்திலும், கைத் தொழிலிலும் ஆட்சித் திறத்திலும் அன்னிய தேசவர்த்தகத்திலும் இன்னும் அநேக நாகரிகத் துறைகளிலும் சிறப்புற்று விளங்கி நின்றனர் எனில் அது சிலருக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனல் புராதன இந்திய சரித்திர ஆராய்ச்சிக்கின்றியமையாதனவான பழைய தமிழ் நூல்களையும் சிலா சாஸனங்களையும் துருவி ஆராயும் ஒவ்வொருவருக்கும் ஒரு சிறிதும் வியப்பாகத் தோன்றாது. சங்க நூல்களையே ஆதாரமாகக் கொண்டு பண்டைத் தமிழரின் கைத் தொழில் சிறப்பையும், வர்த்தகத்தின் மாட்சியையும் ஆராய்வோம்.

சங்க காலங்களிலும் அதற்கு முன்பும் விவசாயம் தமிழரது சிறந்த கைத்தொழிலாய் இருந்த தென்பது "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்" என்ற குறளால் தெரிகின்றது. இதற்கு அடுத்தது நெசவுத் தொழிலாகும். இது சங்க காலத்தில் விசேஷ விருத்தியடைந்திருந்த தென்பதும், மகளிர் இத்தொழிலில் மிகவும் தேர்ச்சி யடைந்திருந்தனர் என்பதும் பட்டினுலும், பருத்தியினுலும் எலி மயிரினுலும் வஸ்திரங்கள் செய்யப்பட்டன என்பது,

"பனிமயிர் குளிர்ப்பன பஞ்சின் மெல்லிய
கனிமயிர் குளிர்ப்பன கண் கொளாதன
எலிமயிர்ப் போர்வை."

சிலப்பதிகாரம்.

என்ற அடிகளாலும், இத்தகைய வஸ்திரங்கள் மிகவும் மெல்லிய தென்பது, "காம்பு சொலித்தன்ன அறுவை" என்ற சிறு பாணாற்றுப் படை வரியாலும், "புகை விரிந்தன்ன பொங்கு துகிலுடீஇ" என்ற புறச்செய்யுளாலும் 'பாம்புரித்தன வான்பூங்கலிங்கமொடு" என்பதாலும் நன்கு விளங்கும்.

பயிர்த்தொழிலும் நெசவுத் தொழிலும் பண்டைத் தமிழரது முக்கியகைத்தொழில்களெனினும் இன்னும் தமிழ் மக்கள் அநேக தொழில்களையுங் கற்றிருந்தனர். இவை மரத்தச்சு, வெண்கல வேலை, இரும்புத் தொழில், சிற்பம், ஓவியம், தங்க வேலை, இரத்தினப் பணி, தையல் வேலை, கோயில் மாளிகைகள் நிர்மாணஞ் செய்தல் முதலியவாம். இவை சிலப்பதிகாரத்தில் மதுரை அங்காடி வீதியைப் பற்றி எழுதப்பட்டிருக்கும் வரிகளில் கூறப்பட்டிருக்கின்றன:—

"வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் [சாந்தமும்
பூவும்பு கையு மேவிய விரையும்
பகர்வனர் திரிதரு நகர வீதியும்
பட்டினும் மயிரினு பருத்தி நூலினுங்
கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையுந்
தூசுந் துகிரு மாரமு மகிலு
மாசறு முத்து மணியும் பொன்னும் [யா
அருங்கல வெறுக்கையோடளந்து கடையறி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங்குவித்த கூலவீதியுங்
காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்
மீன் விலை பரதவர் வெள்ளுப்புப் பகருநர்
பாசவர் வாசவர் பைந்நிண விலைஞரோ
டோசுநர் செறிந்த வூன்மலி விருக்கையும்
கஞ்ச காரரும் செம்பு செய்குநரு
மரங் கொறச் சுருங்கருங்கைக் கொல்லருங்
கண்ணுள் வினை ஓருமண் ணீட்டாளரும்
பொன் செய்கொல்லரு நன்கலந் தருநரும்"

மதுரைக் கடை வீதியில் காணப்பட்ட சாமான்களில் கீழ்வருவன குறிப்பிடத் தக்கன.

"வையமும் பாண்டிலும் மணித்தேர்க் [கொடிஞ்சியு
மெய்புகு கவசமு வீழ்மணித் தோட்டியு
மதள்புனை யரண முமரியா யோகமுங்
வளைதரு குழியமும் வால்வெண் கவரியும்
மேனப் படமுங் கிடுகின் படமுங்
கானப்படமுங் காழன்று கடிகையுஞ்
செம்பிற் செய் நவுங்கஞ்சத் தொழிலவும்."

தமிழ் நாட்டில் சிற்ப வேலைகளிலும் கட்டட மமைப்பதிலும் வடநாட்டாருமற்றவரும் ஒருங்கு உழைத்தனர் என்பது.

மகதவினை ஒரு மராட்டக் கம்மரும்
அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடி
கோண்டினிதியற்றிய கண்கவர் செய்வினை

என்ற மணிமேகலை அடிகளால் புலப்படுகிறது.

இரத்தினப் பணியிலும் பண்டைத் தமிழர் தேர்ச்சியடைந்திருந்தது இளங் கோவடிகள் எழுதியிருக்கும் மதுரை இரத்தினக் கடைவீதியின் வர்ணனையால் விளங்கும்:—

"காக பாதமுங் களங்கமும் விந்துவு
மேகையு நீங்கி இயல்பிற் குன்று
நூலவர் நொடிந்த நுழை நுண்கோடி
நால்வகை வருணத்து நலங்கேழொளியவு
மேகையு மாவயு மிருளொடு துறந்த
யாசார் மேனிப் பசுங்கதி ரொளியவும்
பதுமமு நீலமும் விந்தமும் படிதமும்"

இதுகாறும் கூறிப் போந்தவற்றால் சங்க காலத்திய தமிழர் கைத்தொழிலின் பல வேறு கிளைகளில் பெரிதும் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பது நன்கு ஏற்படுகிறது. இதன் காரணமாகத் தமிழரின் உள் நாட்டு வர்த்தகமும் அந்நிய நாட்டு வர்த்தகமும் செழித்து வளர்ந்திருந்தன. தமிழரின் முக்கியத் துறை முகங்களான புகாரிலும், தொண்டியிலும், கொற்கையிலும் கப்பல்கள் எப்பொழுதும் நிறைந்திருந்தன. காவிரிப்பூம் பட்டினத்தின் துறை முகத்தின் முக்கியமான இறக்குமதியைக்குறிப்போம்:— இவை விரிவாகப் பட்டினப்பாலையில் குறிக்கப்பட் டிருக்கின்றன:—

"நீரின் வந்து நிமிர்பரிப் புரவியுங்
காலின் வந்த கருங்கறி முடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங்
குடமலைப் பிறந்த ஆரமு மகிலு
தென்கடல் முத்துங் குணகடற்றுகிருங்
கங்கை வாரியுங் காவிரிப் பயனு
மீழத் துணவுங் காழகத்தாக்கமும்."

இத்துறை முகத்தில் கரிகால் வளத்தானின் அரசாங்க உத்தியோகஸ்தர்கள், தற்கால அரசாங்கங்கள் போலவே சுங்கத் தீர்வை ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்களின்மீது வசூலித்தாரென்றும் பட்டினப்பாலை மூலமாகத் தெரிகிறது.

தமிழ் நாட்டின் முக்கிய ஏற்றுமதிகள் மிளகு பட்டு, முத்து, இரத்தினம் முதலியனவாம். இது, "சேரலர்
சுள்ளியம் பேர் யாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்தவின்மாணன் கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயதும்
வளங்கெழு முசிரியார்ப் பென்ன"

என்ற அகக்குறிப்பால் விளங்குகிறது.

கி. பி. முதல் நூற்றாண்டு முதல் ஆறும் நூற்றாண்டுவரை தமிழகத்திற்கும் ரோமராச்சியத்திற்கும் இடைவிடாத வர்த்தகப் போக்குவரவு இருந்தது. தமிழகத்திலிருந்து ரோமாபுரிக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன இஞ்சி மிளகு, வாசனைத் திரவியங்கள், வைரம், முத்து, பலவித ஆபரணங்கள், பட்டு இவை முக்கியமானவை. இவை சேர பாண்டியப் பிரதேசங்களில் மிகுதியாய் அகப்பட்டனவாதலான் வருஷா வருஷம் ரோமர் இராச்சியத்திற்கு இவை ஏற்றுமதி செய்யப்பட்டன. அக்காலத்திய ரோம நாட்டுப் பெண்டிர் இந்தியரின் முத்திற்கும் இரத்தின விசேஷங்களுக்கும் பட்டாடைக்கும் அதிக பிரியம் கொண்டிருந்தனர். பிளினி என்னும் மேனட்டாசிரியர் இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட இப்பொருள்கள், ரோமாபுரியின் கடைகளில் இந்தியாவில் விற்கும் விலையை விட நூறு பங்கு அதிக விலைக்கு விற்கப்பட்டனவென்றும் வருஷா வருஷம் இந்திய வர்த்தக மூலமாக சுமார் 8 லக்ஷம் சவரன், ரோமர் நஷ்டமடைகின்றன ரென்றும் குறிப்பிட்டிருக்கிறார். அக்காலத்திய இந்திய ரோம வர்த்தகத்திற்குச் சான்றாக இப்பொழுதும் தமிழ் நாட்டில் பலவிடங்களில் ரோம நாணயங்கள் ஏராளமாய்க் கிடைக்கின்றன.

# பிள்ளையார் பாளையம்

### காங்கிரஸ் பிரசாரம்

(ஒரு நிருபரிடமிருந்து)

சென்ற மார்ச்சுமீ 30-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை பதினைந்து தொண்டர்கள் பிள்ளையார் பாளையம் சென்று ஜனங்களுக்கு மகாத்மா காந்தியின் இயக்கத்தைப் பற்றி எடுத்துரைத்தார்கள். பின்பு மகாத்மாவின் சரித்திரம், அவர்கள் தியாகம், அவர்கள் ஆப்ரிக்காவில் செய்துள்ள வேலை, அவர்கள் இந்தியாவில் ஆரம்பித்திருக்கிற இயக்கம், அதனுடைய தத்துவம், டை யார் இந்திய ஜனங்களிடத்தில் தனக்குள்ள நம்பிக்கையால் படும் கஷ்டம், முதலான விஷயங்களை நன்றாய் எடுத்துக்சொல்லி, அவர்களுடைய மகாத்மியம் இன்னதென்று எடுத்து விரிவாகப் பிரசங்கம் செய்தார்கள். பிரசாரத்தின் பயனாக ஜனங்கள் கதர் அணிவதாயும், குடியை விட்டுவிடுவதாயும், இந்து முஸ்லீம் பரஸ்பர ஒற்றுமையை வளர்ப்பதாயும் வாக்களித்திருக்கிறார்கள்.

### உதவி தாசில்தாரின் இராஜிநாமா

தமது மதக் கட்டளைக்கிணங்கவும் தேச நன்மையை முன்னிட்டும் தொண்டி உதவி தாசில்தாரான ஸ்ரீமான் ஜனுப்பீர் முகமத் புலவர் தம் உத்தியோகத்தை இராஜிநாமா செய்துவிட்டு அரசியலில் அதிகமாக உழைக்கத் தலைப்பட்டு விட்டார் என்று ஹிந்துபத்திரிகை கூறுகிறது.

## வங்காள மாகாண மகாநாடு

### ஸ்ரீ சியாம சுந்தர சக்கரவர்த்தியின் உபந்யாசம்

வங்காள மாகாண மகாநாடு சென்ற மார்ச் மாதம் 31-ந் தேதி ஜெஸ்ஸூரில் ஸ்ரீமான் சியாம சுந்தர சக்கரவர்த்தியின் அவைத்தலைமையில் கூடியது. ஸ்ரீமான் சக்கரவர்த்தி தம் அக்கிராசனப் பிரசங்கத்தில் கூறியதன் சாராம்சம் வருமாறு:— காங்கிரஸ் ஆற்ற வேண்டிய முதல் வேலை தேசமெங்கும் தேசியக் கல்வியைப் பரப்புவதாகும். கதர் அதிக நன்மையைப் பயக்கக் கூடியதாகும். ஜனசமுதாய வேலைகளும் செய்யப்படுவது இன்றியமையாததாகும். ஜனங்களுக்குள் கிளர்ச்சியை உண்டாக்குவதற்காகக் குறிப்பிட்ட ஒரு சட்டத்தை மீறி நடப்பது ஏற்றுக் கொள்ளக் கூடியதல்ல. ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை அத்தியாவசியமானதாகும். ஒற்றுமையினால் தான் பலன்கிடைக்கும். ஆகவேஇந்துக்களும் முஸ்லீம்களும் அபிப்பிராய பேதங்களை விட்டுவிட்டு ஒற்றுமையாய் வாழ வேண்டியது வேண்டற்பாலதாகும். ஜாதிப்பகைமை கிஞ்சித்தும் இந்தியாவில், பாராட்டப்படக் கூடாது. இது மேல் நாட்டிலிருந்து இங்குக் கொண்டு வரப்பட்டதே யல்லாமல் இந்நாட்டிலிருந்து உற்பத்தியானதாக மாட்டாது. நான் ஸ்ரீமான் சி. ர. தாஸரின் அபிப்ராயங்களுக்கு மாறான அபிப்பிராயங் கொள்ள நேரிட்டமைக்காக வருந்துகிறேன். சுயராஜ்யம் அடைவதற்கு ஒத்துழையாமையும் தன்னல மறுப்பும் தான் சிறந்த சாதனங்களாகுமென்று நான் பூராவாய் நம்புகிறேன்.

இம் மகாநாட்டார் பின் வருந்தீர்மானங்களை நிறைவேற்றியுள்ளார்கள். (1) சுயராஜ்யம் அடைய பலாத்கார மற்ற ஒத்துழையா இயக்கமே சிறந்த சாதனமாகும். (2) வங்காளமெங்கும் பருத்திப் பயிர் செய்யப்பட வேண்டும். (3) சர்க்காவைக் கொண்டு நூல் எடுக்க வேண்டும்; அந்நூலைக் கொண்டு கைத்தறிகளில் துணி நெய்யவேண்டும். (4) கூடுமான வரை அந்நிய நாட்டுச் சாமான்களைப் பகிஷ்கரித்து விடவேண்டும். (5) கயை காங்கிரஸ் குறிப்பிட்டபடி வங்காள வாசிகள் திலகர் சுயராஜ்ய நிதிக்கு இரண்டு லட்சம் ரூபாய் கொடுக்க வேண்டும்; பத்தாயிரம் பேர் தொண்டர்களாய்ச் சேரவேண்டும் (6) ஜனங்களிடையில் ஊக்கம் உண்டாக்குவதற்குச் சட்டமறுப்பு இயக்கம் முறையானது; உப்புவரி உயர்வைப் பற்றிய சட்டத்தைக் கண்டிக்க வேண்டும்; பொது சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்க வங்காள காங்கிரஸ் கமிட்டிக்கு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உத்தர வளிக்க வேண்டும். (7) ஜில்லா காங்கிரஸ் சபைகள், லோகல் போர்டுகளிலும் நகரபரிபாலன சபைகளிலும் ஜில்லா போர்டுகளிலும் அங்கம் பெற முயல வேண்டும். (8) இரு கட்சியாரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒரு வேலை முறையைத் தீர்மானிக்க ஒரு விசேஷ காங்கிரஸ் கூட வேண்டும்; இக்காங்கிரஸின் தீர்மானம் எல்லாரையும் கட்டுப்படுத்தவேண்டும். (9) அளவுக்கு மீறி சணல் உற்பத்தி செய்து அதனால் அதிக லாபம் பெறாமல் போவது தடைசெய்யப் படவேண்டும். (10) யூனியன் போர்டுகளைப் பகிஷ்கரிக்க வேண்டும். (11) தொண்டர்படையில் ஸ்திரீகளும் சேரவேண்டும். (12) தீண்டாமையை ஒழிக்கப் பாடுபடவேண்டும். (13) பெண் கல்வி தேசியக் கல்வி ஆகிய இவைகளை அபிவிர்த்தி செய்யவேண்டும். (14) ஒழுங்காக நடக்கப் பிரியப்படாத தொண்டர்கள் தங்கள் பதவியினின்று விலகிவிட வேண்டும்.

## பஞ்சாப் மாகாண மகாநாடு

### ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை

பஞ்சாப் மாகாண அரசியல் மகாநாடு லாகூருக் கருகிலுள்ள சர்கோதா எனுமிடத்தில் ஸ்ரீமான் ராஜாபெரோஜ்உதீன் என்பாரின் அவைத்தலைமையில் கூடியது. அக்கிராசனர், சுயராஜ்யத்தை நாம் நம் முயற்சியினால் பெற வேண்டுமென்றும் அரசாங்கத்தார் கொடுப்பாரென்று எதிர்பார்ப்பதனால் பயனில்லையென்றும் பஞ்சாபில் ஏற்பட்டுள்ள இந்து முஸ்லீம் மனக் கசிவுக்கு அரசாங்கத்தார் செயல்களே காரணமென்றும் காங்கிரஸ் தலைவர்கள் உறுதியாய் நடந்திருந்தால்இப்போது ஏற்பட்டுள்ள மனக் கசிவும் நேர்ந்திராதென்றுங் கூறினார். பின்னர் பஞ்சாபின், பல கிராமங்களில் தண்டப்போலீஸ் வைக்கப்பட்டது கண்டிக்கத் தக்கதென்றும் ஜில்லா மகாநாடு டேரா இஸ்மெயில் கானில் நடைபெறக் கூடாதென்று டிபுடி கமிஷனர் தடை யுண்டாக்கியது முறையானதல்லவென்றும் எல்லைப்புற வாசிகளும் சுயராஜ்யக்கிளர்ச்சியில் சேரவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டன. பஞ்சாபில் ஏற்பட்டிருக்கும் இந்து முஸ்லீம் வேற்றுமை சுயராஜ்யத்திற்குத்தடையுண்டாக்குவதாகு மென்றும் மகாத்மா காந்தியையும் அவருடைய சகாக்களையும் விரைவில் விடுவிக்கக் கூடாததாகுமென்றும் தீர்மானிக்கப்பட்டன. இந்து முஸ்லீம் ஒற்றுமைக்குப் பாதகமாய்க் காரியங்கள் நடைபெறுதவாறு தலைவர்கள் பார்த்துக் கொள்ள வேண்டுமென்று ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

## பிஜி இந்தியர்கள்

### ஆள் வரி

ஸ்ரீமான் சி. எப். ஆண்ட்ரூஸுக்குபீஜியிலிருந்து கீழ்வரும் விஷயங்கள் கிடைத்திருக்கின்றன:—

கூடிய விரைவில் இவ்விடத்திலுள்ள இந்தியர்களுக்கு ஆள் வரி போட்டு வசூல் செய்ய அரசாங்கத்தார் தீர்மானித்துள்ளாராகையாலும் அங்ஙனம் செய்யப்படுவது தாழ்ந்த நிலையில் இருக்கும் இந்தியர்களை அதோகதிக்குக் கொண்டு போகக்கூடியதாகையாலும், இந்தியா அரசாங்கத்தார் இவ்வரிமூலமாய் என்ன தொகை கிடைக்குமென்று பிஜி அரசாங்கத்தார் கருதுகிறரோ அதைக்கொடுத்து எங்களை ரட்சிக்கும்படியாய்க் கேட்டுக் கொள்கிறோம். பிஜி அரசாங்கத்தார் ஆள் வரியைப் போடுவதில்லையென்று தீர்மானிக்காதவரை பிஜிக்கு இந்தியக் கூலிகளை அனுப்பும் விஷயத்தை நிறுத்திவையுங்கள். நாங்கள் என்னகண்டனஞ் செய்தும் ஆள் வரி விதிக்கப்பட்டால் நாங்கள் இந்தியாவுக்குத் திரும்பி வருவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யும் படியாய் இந்தியா அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்கிறோம். இந்தியர்க்கள் உலகத்தின் எப்பாகத்திக்கும் இந்தியத் தொழிலாளர்களை அனுப்புவதில்லையென்று தீர்மானிக்க வேண்டும். பிஜி சட்டசபையார் ஏப்ரல் 10-ந் தேதியில் கூடிய ஆள்வரியைச் சட்டமாக்குவார்கள்.

### 'காரைச் சிவனடியார் திருக்கூட்டத்துப் பிரசாரம்'

(காரியதரிசி அறிவிப்பது.)

செட்டி மார் நாட்டில் மேல வட்டகை மேலப்பத்தூர் முதலிய ௩௦ ஊர்களில் கொன்னையூர், கீரணிப்பட்டி, ஒழுகு மங்கலப்பட்டி முதலிய ஊர்களின் பொங்கலை முன்னிட்டு திருக்கூட்டத்தார் இம் மாதம் ௧௫உ புறப்பட்டு அன்று மாலை கண்டவராயன் பட்டி, ௧௬உ காலை மகிபாலன்பட்டி ஆகிய இவ்விடங்களில் துண்டுப் பிரசுரங்கள் வழங்கினார்கள். ௪௭உ காலை புதுப்பட்டி, மாலை வலையபட்டி, ௧௮உ மாலை ஆ. தெற்கூர், ௧௯உ காலை ஒழுகுமங்கலப்பட்டி, மாலை, ஆ. தெற்கூர், ௨௦உ மாலை நெற்குப்பை முதலிய ஊர்களில் பிரம்மஸ்ரீ கெ. சி. விஸ்வநாத சாஸ்திரிகள், அரு. சோமசுந்தரஞ் செட்டியார், சேவு. மெ. மெய்யப்ப செட்டியார், மு. அருணசலஞ் செட்டியார் முதலியவர்களும் இன்னும் பல அன்பர்களும் பிரசங்கம் செய்தார்கள். துண்டுப் பிரசுரங்கள் 25000 இதுவரை கொடுக்கப்பட்டிருக்கின்றன.





## வடநாட்டில் காங்கிரஸ் பிரசாரம்

### ஸ்ரீ இராஜகோபாலாச்சாரியார் உபந்யாசம்

மார்ச் மாதம் 21-ந் தேதி, ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் பாடலிபுரத்தில் காங்கிரஸ் நிர்மாணவேலைகளை நிறைவேற்ற வேண்டியதன் அவசியத்தைப்பற்றி ஓர் உபந்யாசம் செய்தார். அவ்வுபந்யாசத்தில் காணக்கிடக்கும் முக்கிய விஷயங்களின் கருத்து வருமாறு:—

இதுவரை நாம் காந்தி ஆண்டுவிழாவை எங்ஙனம் கொண்டாடுவதென்பதில் நம் காலத்தைச் செலவழித்தோம். காந்தி ஆண்டுவிழாவும் சென்ற 18-ந் தேதியில் நிறைவேறி விட்டது. இப்போது நாம் செய்யவேண்டிய வேலை, வாக்குறுதிகளையும் உறுதிமொழிகளையும் நிறைவேற்ற வேண்டியதேயாகும். இந்திய சமூகத்தவர் வாக்குறுதிகளை நிறைவேற்றியே தீருவர் என்று பிரபலமாகி யிருக்கிறது. இப்போதும் இந்த சமூகத்தவர் அப்பெயருக்குத் தக்க விதமாகவே நடந்து கொள்வர் என்று நம்புகிறேன். இந்திய சமூகத்தவர் தாங்கள் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றுவதற்காக அவர்களிட மிருந்து பத்திரம் ரசீது முதலானவை ஒன்றும் தேவையில்லையென்றே பண்டைக் காலத்தில் இந்தியாவுக்கு வந்துபோன கிரேக்க யாத்திரிகர்கள் கூறியிருக்கிறார்கள். நம்முடைய நோக்கம் நிறைவேறும் வரை நாம் சோர்வு கொள்ளாமல் சுறுசுறுப்பாய்க் காரியங்களைச் செய்து கொண்டு உறுதிமொழிகளை நிறைவேற்ற வேண்டும். காந்தி வருடதினம் சாதாரணக் கொண்டாட்டமல்ல. அது ஜனங்களுக்குச் சுயராஜ்யத்தை அடையவேண்டுமென்ற விஷயத்தில் இருக்கும் உறுதிப்பாட்டை வெளிப்படுத்தி யிருக்கிறது. உலகத்தில் வேறெந்த தேசத்தினரும், நம்நாட்டினர் அத்தினத்தில் தங்கள் உறுதிப்பாட்டைக் காட்டியதைப்போல், காட்டியதே கிடையாதென்று நான் துணிந்து கூறுவேன்.

ஒத்துழையா இயக்கம் முழுமையிலும் பட்டுவிட்டதா அல்லது இன்னும் சிறிதளவுக்கு இருந்து கொண்டிருக்கிறதா என்று வெளி நாட்டவர் ஊன்றிக் கவனித்து வருகின்றனர். இந்தியாவில் ஆட்சி புரிந்த இராஜ தந்திரிகளும், இராணுவ தளகர்த்தர்களும் நம்மை வெகுவாய்க் கவனித்து வருகிறார்கள். அவர்கள் நம்மைக் காட்டிலும் அதிகமாக நம் இயக்கத்தைப் பற்றி உணர்ந்திருக்கிறார்கள். பெரிய இராணுவ தளகர்த்தரான மகாத்மாகாந்தியால் தோற்று விக்கப்பட்ட ஓர் இயக்கத்தைப் பற்றி அன்னாரைப் போலொத்த இராணுவ தளகர்த்தர்களாலே தான் அறிய முடியும். ஒவ்வொருவரும் ஒத்துழையா இயக்கம் இறந்து பட்டது; மகாத்மா காந்தியை விடுதலைசெய்து விடலாம் என்று கூறியும் அரசாங்கத்தார் அன்னாரைச் சிறையில் வைத்திருக்க வேண்டியது அவசியமென்றே கருதுகின்றனர். ஒத்துழையா இயக்கம் இறந்துவிட வில்லையென்பதும் அதற்குச் சூடுண்டாக்குவதே இப்போது வேண்டியதாய் இருக்கிற தென்பதும் அரசாங்கத்தாருக்குத் தெரிந்து இருக்கிறது. ஒத்துழையாஇயக்கம் இறந்துவிட்டால் மகாத்மாகாந்தியை விடுதலைசெய்வதனால் ஒருவித பாதகமும் இல்லை யென்பதை ஒவ்வொருகுழந்தையும் உணர்ந்தே இருக்கிறது. மகாத்மாகாந்தி சிறையில் இருந்து கொண்டுதான் இருக்கிறார். இஃதொன்றே ஒத்துழையா இயக்கம் இறக்கவில்லையென்பதற்கும் பலமிழந்து விடவில்லையென்பதற்கும் போதிய சான்றாம். உங்கள் சொந்தமாகாண அரசாங்க அங்கத்தினர்களில் ஒருவர் ஒத்துழையா இயக்கம் இறந்து படவில்லை; ஆனால் அதுகட்டுப்பாடானதாய் இல்லாமல் இருக்கிறது என்றுகூறியுள்ளார். ஆகவே இதுகாலை நாம் செய்ய வேண்டியதெல்லாம் பன்மடங்கு ஊக்கத்துடன் தேச முன்னேற்றத்திற்கான காரியங்களைத் தேசியசபையின் தீர்மானத்திற் கிணங்க நிறைவேற்றிக் கொண்டு போவதாகும்.

நாம் செய்யவேண்டியவை யாவை என்பதைப்பற்றி உங்களுக்கு ஞாபகமூட்டுகிறேன். முதலில் காங்கிரஸ் சபைகளைக் கவனித்து அவை சீர்குலைந்து போகாமல் இருக்கவேண்டுமாய்க் காரியங்களைச் செய்யுங்கள். காங்கிரஸ்சபைகள் அவை கிராமசபைகளா யிருந்தாலுஞ்சரி ஜில்லா சபைகளாய் இருந்தாலுஞ்சரி வேறெவ்விதமான சபையா இருந்தாலுஞ்சரி அரசாங்கசபைகளைப் போல் பலமுள்ளவைகளாய் இருக்கவேண்டும். அரசாங்க சபைகள் எங்ஙனம் பலமாய் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றனவோ அதைப்போல் நம் சபைகளாகிய காங்கிரஸ் சபைகள் நிர்மாணிக்கப்பட வேண்டும். ஜனங்கள் காங்கிரஸுக்கு விசுவாசிகளாகவே இருக்கிறார்கள். முன்னைப் போலவே ஜனங்கள் காங்கிரஸிடம் விசுவாசமும் பக்தியும் கொண்டவர்களாய் இருக்கிறார்கள். தொண்டர்களில்சிலருக்கு மாத்திரம் அதிருப்தி ஏற்பட்டிருக்கிறதேயல்லாமல் ஜனங்களுக்குக் காங்கிரஸ்விஷயமாக ஒருவித அதிருப்தியும் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. தொண்டர்களுக்குள் அதிருப்தி ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் சம்ரட்சணைக்கு வேண்டிய சகாயம் இல்லாமையாகும். முற்றுகை என்பது யாதென்பதை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள். ஒரு படையானது கோட்டை ஒன்றைச் சூழ்ந்து கொண்டால் கோட்டைக்குள் இருக்கிறவர்களுடன் சண்டை செய்வதில்லை. ஆனால் அது என்ன செய்கிறதென்றால் கோட்டைக்குள்ளிருப்பவர்களுக்கு உணவுப் பொருள்களும் தண்ணீரும் செல்ல வொட்டாதவாறு தடைசெய்து அதன் பயனாய் உள்ளிருக்கிறவர்களைச் சரண மடையச் செய்கிறது. இதைப் போலவே நம் தொண்டர்களை வறுமை பீடித்திருக்கிறது; நாம் ஏமாற்றமும் சோர்வும் கொண்டிருக்கிறோம். அரசாங்கத்தார் என்ன செய்தால் தங்கள் காரியம் சித்தியாகும் என்பதை உணர்ந்திருக்கிறார்கள். வறுமை, தொண்டர்களைப் பீடித்தால் அவர்கள் இயக்கத்தை விட்டு விலகி விடுவார்களென்று எதிர்பார்த்திருக்கின்றனர். ஜனங்கள் காருண்ய சிந்தையர்களாய் இருந்தால், ஒத்துழையா இயக்கம் முன்னைப்போல் சுறுசுறுப்பாய் இருக்கும். அரசாங்கத்தாரும் ஜனங்களுடன் விடாப்போர் தொடுக்க வேண்டியிருக்கும் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்தே இருக்கிறார்கள். உங்கள் சகோதரர்கள் கோட்டைக்குள் இருந்து பகைவர்களுக்குச் சரணம் அடைந்துவிடுவதாயிருந்தால் அவர்களுக்கு நீங்கள் உணவையும் தண்ணீரையும் எடுத்துச் செல்ல மாட்டீரா என்று நான் உங்களைக் கேட்கிறேன். தொண்டர்களில் பெரும்பாலானவர் வறுமையா தென்பதை அறியாத குடும்பங்களினின்று வந்தவர்களாய் இருக்கின்றனர். அவர்கள் வறுமையா தென்பதை இதுகாலைஉணர்ந்து வருகிறார்கள். இரப்பது இழிவென்று கருதுகிறார்கள். அவர் இதுவரை ஒன்றுஞ்சொல்லாமல் பொறுத்துக் கொண்டிருந்தது முடிவடைந்து வருகிறது. ஆகவே ஜனங்கள் அவர்களுக்கு வேண்டிய உதவியைச் செய்ய முன்வராவிட்டால் இயக்கம் பட்டுவிடும் என்பதில் ஐயமில்லை. காங்கிரஸ்சபைகள் பலத்துடன் கூடியனவாய் இருக்கவேண்டுமென்று கருதினால் ஒவ்வொருவரும் தங்கடமையை உணர்ந்து பணத்தால் உதவி செய்யவேண்டும். உங்கள் சகோதரர்கள் -ஆயிரக்கணக்கான தொண்டர்கள்-இரத்தல் இழிவென்று கருதி மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இதற்குக் காரணம் நம்முடைய தேசம் ஏழ்மை நிலைக்கு வந்துவிட்டமையேயாகும். ஆகவே ஒவ்வொருவரும் தங்களால் கூடிய உதவியைச் செய்து தொண்டர்களின் ஊக்கம் குன்றுதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும்.

சென்ற வருடத்தில் திலகர் நிதிக்குத் தண்டல் செய்யப்பட்ட ஒரு கோடி ரூபா எங்ஙனம் செலவழிக்கப்பட்டது என்பதை அறிய அநேகர் ஆவலுள்ளவர்களாய் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். காங்கிரஸ் பணம் வேண்டும் போதெல்லாம் யாராவது ஒருவர் கடந்த வருடங்களில் கொடுக்கப்பட்ட பணம் செவ்வையாய்ப் பயன் படுத்தப்படவில்லை என்று கூறுகிறார். உடனே சில பத்திரிகைகள் இனியும் பணங்கொடுப்பதன் பயனின்மை என்பதைப்பற்றி நீண்ட வியாசங்களை எழுதிவிடுகின்றன. இதையெல்லாம் ஜனங்கள் கவனிக்கக்கூடாது. சென்ற வருடத்தில் செலவழிக்கப்பட்ட ஒரு கோடி ரூபாய்க்குத்தக்க பலன் கிடைத்திருக்கிற தென்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும். நூற்றுக் கணக்கான கோடி ரூபாய்கள் செலவழித்தாலும் நடைபெறக் கூடாததான வேலையைக் காந்தி ஒரு கோடி ரூபா செலவழித்து நிறைவேற்றியுள்ளார் என்பதை ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ளுதல் அவசியம். ஒரு கோடி ரூபாயைக் கொண்டு மகாத்மா கதர் தேசமெங்கும் பரவ வேண்டியதன் அவசியத்தையும் அதனால் ஜனங்களுக்கு இருக்கப்பட்ட லாபத்தையும் செவ்வையாய் விளக்கியதல்லாமல் அநேகரைக் கதர் கட்டும் படியாயுஞ் செய்திருக்கிறார். இஃதல்லாமல் தீண்டாமையை அதிகமாய் ஒழித்து, சகோதரபாவத்தை பலப்பூடுத்தியிருக்கிறார். அரசாங்கத்தார் அநேக வருடகாலமாய் அதிக பணச்செலவு செய்து கொடுக்க முடியாத அரசியல் கல்வியையும் இலக்கியக்கல்வியையும் ஓராண்டில் ஜனங்களுக்கு அவர் ஊட்டியிருக்கிறார். ஆகவே இவ்வொரு கோடி ரூபா சொல்லொணாத காரியங்களை கூடியவிரைவில் ஆற்றியிருக்கிறதென்பது பெறப்படுகிறது. கொடுக்கப்பட்ட பணம் செவ்வனே செலவழிக்கப்படவில்லையென்று இன்னுஞ் சந்தேகமிருந்தால் சுயராஜ்யம் அடைந்தவுடன் தலைவர்களைவிசாரணை செய்து அவர்கள் சொத்தைப் பறிமுதல் செய்து விடலாம். இப்போது நாம் அதைப் பற்றிப்பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை. பணஉதவி செய்து தொண்டர்களுக்கு ஊக்கத்தை அளிக்கவேண்டும். அம்மாதிரி செய்தாலல்லாமல் அரசாங்கத்தாருக்கு நம்மிடத்தில் மதிப்பு ஏற்பட மாட்டாது. நாம் சுயராஜ்யம் அடைய வேண்மோனால் நம் சபைகள் பலமாய் இருக்க வேண்டும். காங்கிரஸுக்கு விசுவாசிகளாயுள்ளவர்கள் தான் நமக்கு வேண்டும். ஜனங்களுக்கு மகாத்மாவிடம் மதிப்பு இருக்கிற தென்பதையும் காங்கிரஸ் உயிருடன் இருக்கிற தென்பதையுங் காட்ட ஒவ்வொருவரும் காங்கிரஸில் அங்கத்தினர்களாய்ச் சேர வேண்டும். ஏப்ரல் 30-ந்தேதிக்குள் சபை காங்கிரஸ்குறிப்பிட்ட ரூபாயையும்தொண்டர்களையும் சேர்த்துவிடுவது ஒவ்வொருவருடைய கடமையாகும். பீஹார் மாகாண வாசிகளாகிய நீங்கள் உங்கள் பகுதியை ஏப்ரல் 30-ந் தேதிக்குள் கொடுத்துவிடுவீர்களென்று நம்புகிறேன். ஜனங்களிடையில் ஊக்கம் குன்றாமல் இருப்பதற்காக இவ்வருடத்திலும் அநேகர் சிறைக்குச் செல்ல வேண்டும். அடிமையாய் இருப்பதைவிட சிறைக்குப் போக நாம் தயாராய் இருக்கிறோம் என்பதை சிறைக்குச் சென்று காட்டவேண்டும். சுயராஜ்யம் அடைய நமக்கு இருக்கும் ஆவல் தண்ணீரில் மூழ்குகிறவனுக்குக் கரை சேர வேண்டுமென்ற எங்ஙனம் ஆவல் இருக்குமோ அதைப் போலவும் தாக விடாய் கொண்ட மனிதன் தண்ணீருக்காக எப்படி ஆர்வங் கொள்ளுவானோ அதைப் போலவும் பசியால் பீடிக்கப் பட்டவன் சாப்பாட்டிற்காக எங்ஙனம் ஆர்வங் கொள்வானோ அதைப்போலவும் இருக்க வேண்டும். இம்மாதிரியான ஆவல் இருந்தால் தான் நமக்குச் சுயராஜ்யம் கிடைக்கும். "எங் இந்தியா"

# இந்தியாவும் ஜப்பானும்

## வரவுசெலவு திட்டங்கள்

"மாடர்ன் ரேவியூ"

பிரிட்டிஷ் இந்தியாவின் ஜனத்தொகையில் ஏறக்குறைய நாலில் ஒரு பங்கு ஜனத்தொகையை யுடையதுஜப்பான். ஜப்பான் அரசாங்கத்து 1923-24-ம் வருட வரவுசெலவு திட்டத்தில் வரவு 1,350,000,000 என் (இது சுமார் இருனூற்றைந்து கோடி ரூபாய்க்குச் சமானம்) என்று மதிப்பிடப் பட்டிருக்கிறது. இது மொத்தவருமானமல்லவென்றுதெரிகிறது. அதே 1923-24ம் வருஷத்தில் பிரிட்டிஷ் இந்தியாவின் எதிர்பார்க்கப்பட்ட வருமானம் சுமார் 198¼கோடி ரூபாஎன்றுமதிப்பிடப் பட்டிருக்கிறது. இதனால் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு நாலில் ஒருபங்கு ஜனத்தொகையையுடைய ஒரு தேசம் இந்தியாவைவிட அதிகமான வரும்படியை அடைகிறது என்பது வெளிப்படுகிறது. ஜப்பானில் விளைபொருள்களும் அவ்வளவாய் இல்லை. ஜப்பானியர்கள் இந்தியர்களைக் காட்டிலும் புத்திசாதுர்யத்தில் மேலானவர்களுமல்ல. அப்படியெல்லாமிருந்தும் ஜப்பான் பணக்கார தேசமாய் இருப்பதற்குக் காரணமென்ன? இதற்கு ஜனங்களும் இந்தியா அரசாங்கத்தாரும் பதில் அளிப்பாராக.

### இந்தியாவின் இராணுவச்செலவும் ஜப்பானின் இராணுவச்செலவும்

ஜப்பானுக்கு இந்தியாவைக்காட்டிலும் அதிகமானவரும்படிகிடைக்கிறது. அப்படியிருந்தும் 1923-24-ம் வருடத்திற்கு ஜப்பான்; இராணுவச்செலவுக்காக சுமார் 31 கோடிரூபாதான்ஒதுக்கிவைத்திருக்கிறது. குறைந்த வருமானத்தையுடைய இந்தியா அரசாங்கத் தாரோவெனில் இராணுவச் செலவுக்காக அறுபத்திரண்டுகோடி ரூபாயை ஒதுக்கிவைத் திருக்கின்றனர். இதனால் ஜப்பான் இந்தியாவைவிட குறைந்த தொகையை இராணுவத்திற்காகச் செலவழித்துத்தன்சுதந்தரத்தைக்காப்பாற்றிக் கொள்ளக் கூடியதா யிருப்பதல்லாமல் வல்லரசுகளும் தன்னைக்கண்டு நடுங்கும்படியாய்ச் செய்திருக்கிறது என்பதும் தெரிகிறது. ஆனால் இந்திய இராணுவத்தைக் கண்டு வடமேற்கு எல்லைப்புறத்திலிருக்கும் பெரிதும் நாகரிகம் வாய்க்காத பட்டாணியர்களும் இன்னும் கீழ்ப்படிந்து போகவில்லை. இராணுவச்செலவுக்கென திட்டம் போட்டிருக்கும் தொகையைக் கொடுக்காவிட்டால் அந்நியர்படையெடுப்பு நேரிடுமென்றும் இந்தியா அரசாங்கத்தார் கூறுகின்றனர்.

ஜப்பான் தற்காப்புக்கும் ஆக்ரமிப்புக்கும் வேண்டிய கடற்படையைப் பெற்றிருக்கிறதென்பதும் இந்தியாவுக்குக் கடற்படை இல்லையென்பதும் உண்மையே. ஆனால் இக்கடற்படைக்காக ஜப்பான் அரசாங்கத்தார் 276,000,000 என் செலவழிக்கின்றனர். இராணுவத்திற்கும் கடற்படைக்கும் சேர்ந்து ஜப்பான் அரசாங்கத்தார் 1923-24-ம் வருடத்திற்கென 721,500,000 ரூபா திட்டம் போட்டிருக்கின்றனர். ஜப்பான், இராணுவத்திற்கும் கடற்படைக்குமாகச் சேர்ந்து 72 கோடி ரூபா செலவழித்து (அதாவது இராணுவத்திற்காக இந்தியா மாத்திரம் செலவழிக்கும் தொகைக்கு மேல் பத்து கோடி ரூபாய்) பிறநாட்டார் நடுங்கத்தக்க விதமாய் இராணுவத்தையும் கடற்படையையும் வைத்துக் கொண்டிருக்கிறது.

இப்போது செலவழிக்கும் தொகைக்குமேல் ஒரு பத்துகோடி ரூபா அதிகமாய்ச் செலவழிப்பதனால் இந்தியா ஜப்பானைப்போல் அவ்வளவு பலமுள்ளதாகவும் செழுமையுள்ளதாகவும் இருக்கக் கூடுமானால் அத்தொகையைச் செலவழிக்க இந்தியா பின் வாங்காது.

இந்தியா அவ்வளவு பணத்திற்கு என்ன செய்யும் என்று கேள்வி கேட்கப் படலாம். இவ்விஷயத்தைக் கவனிக்குமுன் ஜப்பான் இராணுவத்திற்கும் கப்பற்படைக்கும் செலவழிக்குந் தொகை முழுமையும் பிறநாடுகளுக்குச் சென்றுவிடாமல் தன் நாட்டிலேயே இருந்துவிடுகிறது. ஜப்பானின் இராணுவத்தைச் சேர்ந்தவர்களும் கடற்படையைச் சேர்ந்தவர்களும் ஜப்பானியர்களே யாவர். ஆகவே இவர்கள் தாங்கள் சம்பாதிக்கும் வருமானத்திலிருந்து கொடுக்கும் வரி முதலானவை அரசாங்கத்துக்கே போய்ச் சேர்கின்றன. அதனால்தான் ஜப்பானுக்கு அதிகமான வரும்படி கிடைக்க ஏது விருக்கிறது.

தன் இராணுவத்திற்கும் கடற்படைக்கும் வேண்டிய சாமான்களைச்செய்ய ஜப்பான் சொந்தமாகத் தொழிற்சாலைகளைப் பெற்றிருக்கிறது.இவைகளெல்லாம்அந்தத் தேசத்திலேயேஇருப்பதனால் அந்தத்தேசத்து தொழிலாளர்களே இலாபம் அடைகின்றனர். இம்மாதிரியான வழிகளாலும் ஜப்பானியர்கள் அரசாங்கத்துக்கு வரியாக அதிகபணங் கொடுக்கக் கூடியவர்களாய் இருக்கிறார்கள். இராணுவவீரர்களும் இந்தியர்களா யிருந்து இராணுவத்திற்கும் கடற்படைக்கும் வேண்டியசாமான்கள் இந்தியாவிலே இந்திய தொழிற்சாலைகளில் செய்யப் பட்டால் நாமும் இராணுவம் கடற்படை விஷயமாய் அதிக பணம் செலவழிக்கக்கூடும்.

#### சம்பளவிகிதங்கள்

ஜப்பானில் உத்தியோகஸ்தர் களுக்கு கொடுக்கப்படும் சம்பளவிகிதங்களுக்கும் இந்தியாவில் உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளவிகிதங்களுக்கும் மிகுதியான வித்தியாசம் இருக்கிறது. ஜப்பானுக்கு இந்தியாவைக் காட்டிலும் அதிகமான வரும்படிவந்தும் பிரதம மந்திரியாருக்கு மாதமென்றுக்கு 1500 ரூபாயும் மற்றமந்திரி களுக்கு ஆயிரம் ரூபாயும் சம்பளமாகக் கொடுக்கப் படுகிறது. இதற்கும் நம் மாகாண மந்திரிகளின் சம்பளத்திற்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது. நம் மந்திரிகள் வருடம் ஒன்றுக்கு 64ஆயிரம்ரூபாய்சம்பளமாகப்பெறுகிறார்கள். ஜப்பானின் பிரதம நீதிபதி மாதமொன்றுக்கு 750 ரூபா சம்பளம் பெறுகிறார். இஃது ஐகோர்ட் நீதிபதி ஒருவர் பெறும் சம்பளத்தில் ஏழில் ஒரு பங்காகும்.



Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar, (Editor) at the Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras

